# வரலாற்றில் சௌரி சௌரா

(நூற்றாண்டின் நினைவாக)







- ஆர். பட்டாபிராமன்

சிறு வெளியீடு ஜனவரி 2022

வரலாற்றில் சௌரி சௌரா

(நூற்றாண்டின் நினைவாக)

சௌரி சௌரா குறித்த பொறி ஒன்று உள்ளுள் கிளைத்தபோது அதன் நூற்றாண்டு என்ற செய்தியும் இணைந்துகொண்டது. ஏன் அந்நிகழ்வு தொடர்ந்து சில வரிகளுடன் மட்டும் பொதுப்புத்தியில் கடந்துபோக செய்யப்பட்டுள்ளது என்ற கேள்வியும் எழுந்தது.

மக்கள் ஊர்வலம் சென்றனர். போலீஸ் அத்துமீறி சுட்டனர். ஆத்திரமூட்டல்களுக்கு இரையான திரளான கூட்டம் போலீஸ் நிலையத்தை எரித்து அவர்களையும் தீக்கிரையாக்கியது. காந்தி போராட்டத்தை நிறுத்தினார். விமர்சனம் எழுந்தது. காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. பிரிட்டிஷ் தாக்குதல் தொடர்ந்து காந்தி சிறைவைக்கப்பட்டார். காந்தி அந்நிகழ்வை கிரைம் எனக் கண்டித்து எழுதினார். ஒத்துழையாமை நின்றது. இப்படித்தான் சௌரி சௌரா பலராலும் எழுதப்பட்டு வரலாற்று பக்கங்களில் கேள்விகளை எழுப்பிக்கொள்ளாமல் கடந்து போயுள்ளது.

சௌரி சௌராவில் எரியுண்ட போலீசார் எவர்- என்ன பின்னணி- எவர் போராட்டத்தில் தலைமை தாங்கினர்- வழக்கு ஏதாவது இருந்ததா- என்ன தீர்ப்பு- மரணதண்டனை பெற்றவர்கள் தியாகிகளா- தேசபக்த போராளிகள் எனக் கருதப்பட்டு எவராவது கொண்டாடப்பட்டனரா- இல்லை கிரிமினல்களா – எவர் அவர்? எரிந்தவர் குடும்பங்கள் என்னவாயின அவர்கள் இந்தியர்களா- எம்மதத்தினர் என பல்வேறு கேள்விகளுடன் கிடைக்கின்ற தரவுகளை பார்க்க முனைந்தேன். கிட்டிய சிலவற்றை பகிர்ந்துகொண்டுள்ளேன். எல்லா கேள்விகளுக்கும்- இன்னும் எழ வேண்டிய கேள்விகளுக்கும் பதில் இல்லாமல் இருக்கலாம். ஆனால் தமிழில் இது குறித்த நன்முயற்சி என சொல்லிக்கொள்ளலாம்.

இறுதிப்பகுதியில் பல்வேறு ஆளுமைகள்- வரலாற்று அறிஞர்கள் சௌரி சௌரா குறித்து என்ன பதிவைத் தந்துள்ளனர் என தனியாக தந்துள்ளேன். திரு வி க மனிதவாழ்வும் காந்தியடிகளும், தமிழ்நாட்டில் காந்தியில், மகாத்மா நூல்வரிசை அகிம்சா தர்மத்தில், வின்செண்ட் ஸ்மித்தின் ஆக்ஸ்போர்ட் இந்திய வரலாற்றில், மஜூம்தாரின் இந்திய சிறப்பு வரலாற்றில், சோவியத் அறிஞர்களின் இந்திய வரலாற்றில், பிபின் சந்திராவின் நவீன இந்தியாவில், பிபின் மற்றும் நால்வர் எழுதிய இந்திய சுதந்திர போராட்டத்தில், இ எம் எஸ் எழுதிய இந்திய விடுதலை போராட்ட வரலாற்றில், வி பி மேனன் எழுதிய ட்ரான்ஸ்பர் ஆப் பவர் இன் இந்தியாவில், ஆர்.பி மசானியின் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆக்கத்தில், எம் என் ராய் எழுதிய கட்டுரையில், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் ஆவண நூல்தொகை 1923-25லிருந்து என தனித்தனியாக பதிவுகளைத் தந்துள்ளேன்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி ஆவணம் சௌரி சௌராவிற்கான அலகாபாத் உயர்நீதிமன்ற தீர்ப்பை கையில் வைத்துக்கொண்டு பேசிய ஆவணமாக இருப்பதால் அதில் மற்றவர்களை விட கூடுதல் தகவல்கள் இருப்பதை பார்த்ததில் வரலாற்றின் குறையை அவர்கள் போக்கிவிட்டனர் என்கிற மகிழ்ச்சி இருந்தது. பிபின் உட்பட ஐவர் எழுதிய சுதந்திர போராட்டம் குறித்த மிக முக்கிய புத்தகத்தில் காந்தி செய்தது தவறா- எழுந்த விமர்சனங்கள் சரியா என்பதைக் குறித்த நீண்ட விவாதத்தை

முன்வைத்துள்ளது. நீண்ட ஆங்கிலத் தொடர் வாக்கியங்களாக அவை அமைந்துவிட்டன. ஆனாலும் ஆவணம் என்கிற வகையில் படிப்போர்க்கு பயனளிக்கும்.

சௌரி சௌரா காலம் குறித்து ஏராள செய்திகள் ஆங்காங்கே இருக்கலாம். தூக்கில் தொங்கவிடப்பட்ட அந்த குடும்பங்கள் என்னவாயின- கிராமத்தில் அக்குடும்பங்கள் எப்படிப்பட்ட உளவியல் ஆதரவை- அல்லது தாக்குதலை எதிர்கொண்டன. அந்தக் குடும்பத்தின் வாரிசுகள் எவருக்காவது ஏதாவது பெருமித உணர்விருக்கிறதா- அல்லது குற்றவுணர்விருக்கிறதா என்று எதுவும் எனக்கு தெரியவில்லை. எரிந்து போன காவலர் குடும்பங்கள் என்னவாயின- விடுதலை இந்தியா அவர்களை எப்படி பார்த்தது- அந்தக் குடும்ப வாரிசுகளுக்கு இன்னும் இந்நிகழ்வை நினைத்தால் துயரம் இருக்கிறதா- குற்றவுணர்வு இருக்கிறதா எதுவும் தெரியவில்லை. இப்படி மிக முக்கியமான சம்பவம் வரலாற்றின் நினைவுகளில் ஓர் ஓரம் கூட கிடைக்கப்பெறாமல் மௌனமாக விடுதலை இந்தியாவில் என் போன்ற தலைமுறைகளால் கடந்து செல்லப்பட்டுள்ளது. இப்படி இன்னும் எத்தனையோ மனிதர்கள் நம் நினைவு குகைக்கு அப்பால்... புதையுண்டவர்களாக...

டிசம்பர் 26, 2021

# II

காந்தியின் ஒத்துழையாமை இயக்கம் தீவிரமாக எழுந்தபோது அன்று அய்க்கிய மாகாணம் ( உ.பி) பகுதியிலிருந்த கோரக்பூர் மாவட்டம் சார்ந்த சௌரிசௌராவில் பிப்ரவரி 4 1921ல் நடந்த வன்முறை காந்தியை இப்போராட்டத்தை விலக்கிக்கொள்ளவைத்தது. காங்கிரசில் இருந்த நேரு உட்பட பலர் இதில் உடன்படாமல் விலக்கிக்கொண்டதை விமர்சித்து கருத்துக்களை தெரிவித்தனர். ஆகஸ்ட் 1920ல் எழுந்த ஒத்துழையாமையின்போது காந்தி அகிம்சைவழி சத்தியாகிரகம் எனில் ஒராண்டில் சுயராஜ்யம் என்கிற நம்பிக்கையை தெரிவித்திருந்தார்.

பிப்ரவரி 1, 1922 அன்று இறைச்சி விலையேற்றத்தை எதிர்த்து போராடியவர்களை போலீசார் தாக்கினர். போராளிகளில் சிலர் போலீஸ் நிலையத்தில் பிடித்து வைக்கப்பட்டனர். பிப்ரவரி 4/5 அன்று ஆயிரக்கணக்கானவர்கள் போலீஸ் நிலையம் நோக்கி பேரணியாக சென்று போராளிகளை விடுவிக்க வற்புறுத்தினர். முதலில் வான் நோக்கி போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்தினர். எரிச்சலடைந்த சிலர் கற்களை வீசி தங்கள் தாக்குதலைத் துவங்கினர். உதவி ஆய்வாளர் கூட்டத்தை நோக்கி சுடத்துவங்கினார். கலவரத்தில் கோபமடைந்த சிலர் போலீஸ் நிலையத்திற்கு தீவைத்தனர்.

பிரிட்டிஷ் நிர்வாகம் Martial Law என்கிற அடக்குமுறை சட்டத்தை அறிவித்தது. 228 பேர்கள் மீது வழக்கு எனச் சொல்லி 172 பேருக்கு மரணதண்டனை என்றது நீதிமன்றம். அப்பீல் காரணமாக அலகாபாத் உயர்நீதிமன்றம் வழக்கை மறுவிசாரணை செய்து 19 பேர்கள் மீதான மரணதண்டனையை உறுதி செய்தது. 110 பேருக்கு ஆயுள்தண்டனை என்றது.

இந்த நிகழ்வின் 60 ஆம் ஆண்டை குறிக்கும் வகையில் அன்றைய பிரதமர் இந்திரா அம்மையார் ஷாகித் ஸ்மரக் என்கிற தியாகிகளுக்கான நினைவுத்தூண் ஒன்றிற்கு 1982 பிப்ரவரி 6ல் அடிக்கல் நாட்டினார். நினைவிடம் 1993ல் முடிக்கப்பட்டது. பிரதமராக இருந்த நரசிம்மராவ் இதனை ஜூலை 19, 1993ல் திறந்துவைத்தார். 1998ல் மியுசியம் ஒன்றும் இத்துடன் இணைக்கப்பட்டது. இந்த நிகழ்வின் நூற்றாண்டு நினைவு நிகழ்வை தற்போதுள்ள பிரதமர் மோடி அவர்கள் பிப்ரவரி 4 2021ல் துவங்கிவைத்தார். அஞ்சல்தலை ஒன்றும் வெளியிட்டனர். இப்படித்தான் அதன் நூற்றாண்டு வரலாறு எளிமையாக சொல்லப்பட்டுக்கொண்டிருக்கிறது.

காந்தியை பிரிட்டிஷ் ஆட்சியின் மீது disaffection கொள்ளச் செய்த காரணிகளாக பஞ்சாப் நிகழ்வுகள்- கிலாபத் அமைந்தன. ரௌலட் சட்டம்- ஜாலியன்வாலாபாக் நிகழ்விற்கு பின்னர் பிரிட்டிஷ் மீதான நம்பிக்கையில் காந்திஜி சரிவைக் கண்டார். சன்னி இஸ்லாமியர்க்கான கிலாபத் இயக்க நிகழ்வும் பெரிதாக உருவெடுத்தது. செயிண்ட் ஸ்டீபன் கல்லூரி முதல்வர் சுஷில் ருத்ரா இல்லத்தில் ஆசாத் மற்றும் அஜ்மல்கான் உடன் விவாதித்துக்கொண்டே ஒத்துழையாமை குறித்து தெரிவித்தார்.

மீரட்டில் நடந்த கிலாபத் மாநாட்டில் ஆசாத் இதை முன்வைக்கிறார். மகாத்மா காந்தி மார்ச் 10, 1920ல் ஒத்துழையாமை ஒன்றே தீர்விற்கான மருந்து என்கிற அறிக்கையை வெளியிடுகிறார்.

கிலாபத் மாநாடு 1920 ஜூலை 7 அன்று ஒத்துழையாமை கமிட்டி ஒன்றை தன் அலகாபாத் அமர்வில் அமைக்கிறது. பள்ளி- கல்லூரி- நீதிமன்றங்களை விட்டு வெளியேறுவோம் என்கிற முழக்கம் தரப்படுகிறது. பட்டங்களை துறப்பீர் என்கிற வேண்டுகோளும் வருகிறது. ஒத்துழையாமை தொடங்கப்படும் நாளான ஆகஸ்ட்1, 1920யை முழு ஹர்த்தால் தினமாக கடைப்பிடிக்க அறிவுறுத்தல் வருகிறது. காந்தியும் தனது Kaiser I Hind Gold Medal (ஜூலு யுத்தக்காலத்தில் கொடுக்கப்பட்ட ஒன்று) திரும்பக்கொடுத்து செம்ஸ்போர்ட் வைஸ்ராய்க்கு கடிதம் எழுதுகிறார். பஞ்சாப், சிந்து , மதராஸ் பகுதிகளில் காந்தியும் சௌகத் அலியும் சுற்றுப்பயணம் மேற்கொள்கின்றனர். மகாத்மா காந்தி- சௌகத்அலிக்கு ஜே என்பதை நிறுத்தச் சொல்லி, இந்து- முசல்மான் ஒற்றுமை ஓங்குக, வந்தே மாதரம், அல்லாஹூ அக்பர் போன்ற முழக்கங்கள் மட்டும் போதும் என அறிவுறுத்துகின்றனர்.

செப்டம்பர் 4,1920 கல்கத்தா காங்கிரஸ் அமர்விற்கு லாலாஜி தலைமை தாங்குகிறார். பொருளாய்வுக்குழுவில் காந்தி முன்வைத்த ஒத்துழையாமை தீர்மானம் பெரும் எதிர்ப்பை சந்திக்கிறது. விவாதம் ஆறுமணி நேரம் கடந்தும் நடந்தது. சி ஆர் தாஸ், பிபின் சந்திரபால், ஜின்னா, மாளவியா, லாலாஜி, அன்னிபெசண்ட் போன்ற பல மூத்தவர்களை காந்தி எதிர்கொண்டார். பிபின் தன் திருத்தத்தை வாக்கிற்குவிடச் சொல்லி அவரால் வெற்றிபெற முடியவில்லை. காந்தியின் வாதங்களால் தீர்மானம் 148ஆதரவு வாக்குகளையும்- 133 எதிர்ப்பு வாக்குகளையும் கண்டு வெற்றிபெற்றது. பஞ்சாப் நிகழ்வுகள், கிலாபத் ஆகிய இரண்டை மட்டும் முன்வைக்காமல் சுயராஜ்யம் என்பதை ஏன் சேர்க்கக்கூடாது என்கிற மோதிலால் வாதத்தை காந்தி ஏற்றார்.

தனது ஒத்துழையாமை திட்டம் சிறப்பாக அனைவரின் ஒத்துழைப்புடன் நடந்தேறும் எனில் ஓராண்டில் சுயராஜ்யம் எனவும் காந்தி தெரிவித்தார். சி ராகாவாச்சாரியார் பிரிட்டிஷ் பொருட்கள் பகிஷ்காரம் என்பதை ஏன் இணைக்கக்கூடாதென கேட்டதையும் காந்தி ஏற்றுக்கொண்டார். காந்தி தீர்மானத்தை பொது அரங்கில் I stand before you in fear of God and a sense of Duty எனப்பேசி முன்வைத்தார் .

The following steps were suggested to achieve these objectives:

a) Surrender of titles and honorary offices and resignation of nominated posts in local bodies;

b) Refusal to attend Government- official and semi-official functions held by government officials, or in their honour;

c) Gradual withdrawal of children from schools and colleges in the various provinces;

d) Gradual boycott of British courts by lawyers and litigants and establishment of private arbitration courts by them for the settlement ofprivate disputes;

e) Refusal on the part of the military, clerical and labouring classes to offer themselves as recruits for service in Mesopotamia;

f) Withdrawal by the candidates from election to the reformed councils and refusal on the part of the voters to vote for any candidate who may, despite the Congress advice, offer himselffor election.

g) Boycott offoreign goods

சி ஆர் தாஸ் போன்றவர்கள் சட்டமன்ற பகிஷ்கரிப்பு என்பதை ஏற்க மறுத்தனர். காந்தியின் தீர்மானம் அங்கும் வாக்கிற்கு விடப்பட்டு பெரும்பான்மையுடன் ஏற்கப்பட்டது. 1885 வாக்குகளில் 873 எதிர்ப்பாக விழுந்தது. இந்த ஒத்துழையாமை நேஷனலிசம்- கிலாபத்திசம் என்பதில் மய்யம்கொண்டது.

நவம்பர்- டிசம்பர் 1920ல் நடந்த தேர்தல்களில் காங்கிரஸ் முடிவையொட்டி ராஜேந்திரபிரசாத், மஷ்ருல் ஹக், என் சி கேல்கர் போன்றவர்கள் வேட்புமனுவை திரும்ப பெற்றனர். சில இடங்களில் ஒரே ஒரு வேட்பாளர் என்ற நிலையும், வாக்காளர்களில் 25 சத அளவிலுமே வாக்களித்தனர். பிரிட்டிஷ் அரசாங்கம் தேர்தலை வெற்றிகரமாக நடத்தவேண்டும் என எடுத்த நடவடிக்கைகளில் தோல்வியை சந்தித்தனர். கல்கத்தாவில் தோற்றவர்கள் அடுத்து வந்த நாக்பூரில் தங்கள் பலத்தைக் காட்டவிழைந்தனர். தாஸ் கல்கத்தாவிலிருந்து 250 அஸ்ஸாமிலிருந்து சார்பாளர்களை ரூ 36000 செலவு செய்து அழைத்துவந்த வரலாற்று செய்தியையும் நாம் அறிகிறோம். தாஸ்- காந்தி சந்திப்பில் சட்ட கவுன்சில் பகிஷ்கரிப்பை காந்தி நீக்க வற்புறுத்தினார். காந்தி தனக்கு அதில் மறுப்பில்லை என தெரிவித்தார்.

C.R.Das narrated the story as follows: "It was at'my instance that the clause with regard to the boycott of Councils was removed because at the time of Nagpur session, the elections were practically over. எதிர்ப்பில் இருந்த தாஸ்- லாலாஜி ஆகியோரின் ஆதரவுடன் நாக்பூர் காந்தியின் கரத்தை வலுப்படுத்தியது. காந்தி- மோதிலால்- தாஸ்- லாலாஜி என்கிற 4 கால்களுடன் இப்போது ஒத்துழையாமை எழுந்து நிற்கிறது என பேச்சு வந்தது. காந்தி நூற்பை வலியுறுத்தினார். ஒத்துழையாமையின் வெற்றி மக்கள் திரள் மீதான நம்பிக்கையில்தான் இருக்கிறது என்பதை காந்தி கவனப்படுத்தினார். இந்தியாவில் பெருந்திரள் போராட்டத்திற்கான முதல் முயற்சியாக இந்த ஒத்துழையாமை பார்க்கப்பட்டது.

செல்வம் கொட்டக்கூடிய புகழ் வாய்ந்த தங்கள் நீதிமன்ற தொழிலை தாஸ், சென்குப்தா, மோதிலால், டாக்டர் கிச்சலு, ராம் புஜ் தத், வல்லபாய் படேல். எம் ஆர். ஜெயகர், போபட்கர், ஆசப் அலி, முகம்மது தாகி என பலரும் விட்டனர். நாடுமுழுதும் 1500 வக்கீல்களாவது இந்த தொழில் தியாகத்தை செய்து இருப்பர். ஏறத்தாழ லட்சம் மாணவர்கள் கல்விக்கூடங்களிலிருந்து வெளியேறியிருப்பர். பிரிட்டிஷ் கணக்கில் 20000 பவுண்ட் அளவு தேர்வு கட்டணம் வராமல் போனதான பதிவைக் காண்கிறோம். லண்டனின் படித்துக்கொண்டிருந்த கமலாதேவி, ஆக்ஸ்போர்ட் சார்ந்த ஏ.கே பிள்ளை வெளியேறினர். ஜாகீர் ஹூசைன், லால்பகதுர் சாஸ்திரி, ஜெயபிரகாஷ், பியாரிலால், பெரோஸ் சந்த், சந்திர சேகர ஆசாத் போன்ற மாணவ செல்வங்களை இயக்கம் கவ்விப்பிடித்தது. ஆங்காங்கே தலைவர்கள் முயற்சியால் தேசிய பள்ளிகள் நிறுவப்பட்டன.

இந்த ஒத்துழையாமையில் குடிக்கு எதிரான இயக்கமாகவும்- அரசாங்க வருவாயை வீழத்தும் இயக்கமாகவும் பார்க்கப்பட்டது. அந்நிய துணிகள் பகிஷ்கரிப்பு மான்செஸ்டரில் பெரும்பாதிப்பை உருவாக்கியது. கிரகாம் கம்பெனி, ராஸ் ஹெலெட், தாமஸ் டினின் போன்றவைகள் திவால் நிலைக்கு சென்றன. காதி- நூற்பு என்பது இயக்கமாக துவங்கியது.நேரு இதை அக்கட்டத்தின் livery of freedom என அழைத்தார்.

மார்ச் 31, 1921ல் அட்ந்த விஜயவாடா அமர்வு ஒத்துழையாமையின் முதல்கட்ட முடிவை குறித்துக்கொண்டது எனலாம். இராட்டை நூற்பு, திலகர் நிதி என்பதில் காந்தி கவனம் செலுத்தினார். கோடி காங்கிரஸ் உறுப்பினர்கள் என்பதை முன்வைத்தார்.

பெருந்திரளான மக்களை போராட்டத்தில் இழுக்கமுடிந்த தலைவர் ஒருவரை முதன்முதலாக வைஸ்ராய் சந்திக்க இசைந்தார். மாளவியா முன்முயற்சியால் மே 1921ல் ரீடிங் உடன் காந்தி சந்திப்பு நடந்தது. இந்தியர்களின் அதிருப்திக்கான காரணங்கள், வன்முறை ஆகியவை குறித்து விவாதிக்கப்பட்டது . பேச்சுவார்த்தை உடனடியான பலனைத்தரவில்லை. பம்பாயில் கூடிய காங்கிரஸ் கமிட்டி செப்டம்பர் 1921ல் அந்நியதுணிகள் பகிஷ்கரிப்பு, வேல்ஸ் இளவரசர் பகிஷ்கரிப்பு என முடிவெடுத்தனர். அந்நியத் துணிகள் எரிப்பு போராட்டமும் இளவரசர் பகிஷ்கரிப்பும் பெருமளவில் நடந்தேறியது. தலைவர்கள் கைது படலம் துவங்கியது.

லாலாஜி,, மோதிலால், மாலிக் லால்கான், மோதிலால், ஜவஹர், ராஜாஜி, பெரியார், டி எஸ் ராஜன் போன்ற பலர் கைது செய்யப்பட்டனர். சி ஆர் தாஸ் அவரது துணைவியார் வசந்தியும் போஸ், ஆசாத், பிபின் பால் கைதாயினர். மாளவியா முன்முயற்சியால் தாஸ் மற்றும் ஆசாத் இருவரும் இணைந்து காந்தியிடம் போராட்டத்தை நிறுத்த வேண்டினர். தீர்வின்றி முடிப்பதில் உள்ள தயக்கத்தை காந்தி வெளிப்படுத்தினார்.

டிசம்பர் 24 1921ல் வேல்ஸ் இளவரசர் வருகையை கவனத்துடன் கையாள அரசாங்கம் விரும்பியது. மாளவியா, ஜின்னா, பெசண்ட் அழைத்து தன் கருத்தை வைஸ்ராய் முன்வைத்தார். வட்டமேஜை மாநாடு என்கிற கருத்தை ஜனவரி 1921லேயே காங்கிரசார் நிராகரித்திருந்தனர். அதை அரசாங்கம் மீண்டும் பேசுவது கண்துடைப்பு என்கிற கருத்தே மேலோங்கியிருந்தது.

மாளவியா ஏற்பாட்டில் 300 பேர் பங்கேற்ற சிறப்பு மாநாடு ஒன்று ஜனவரி 14, 1922ல் கூட்டப்பட்டது. அரசாங்கத்துடன் சமரசம் செய்துகொள்ள வழிகளைக் காணும் கூட்டமாக அது அமைந்தது. காந்தியும் ஒத்துழையாமை செய்வோர் சார்பில் கலந்துகொண்டார். மாநாடு 'வட்டமேஜை ஏற்பாடு வேண்டும்' என தீர்மானித்தது. அரசாங்கம் பேச்சுரிமையை ஒடுக்ககூடாதென்றனர்.. காந்தி கள்ளுக்கடை மறியலை விலக்கிக்கொள்ள சம்மதித்தார். ஆனால் சட்டமறுப்பு போராட்டம் ஜனவரி 31, 1922வரை இருக்கும் என்றார். சௌரி சௌரா வழக்கில் மரணதண்டனை பெற்றவர்களின் எண்ணிக்கையை குறைப்பதில் மாளவியா பங்காற்றினார் என்ற செய்தியும் நமக்கு கிடைக்கிறது.

மத்திய சட்டமன்றத்தில் இந்தியர்கள் குறைகள்தான் என்ன என்பதைக்குறித்து ஆய்வு செய்திட உறுப்பினர்கள் கமிட்டி ஒன்றை அமைக்க உறுப்பினர் முகம்மது யாமின்கான் கோரினார். தேஜ்பகதூர் சாப்ரு உட்பட சிலர் இதை எதிர்த்தனர். போராட்டம்

சிறுதுளியாக இருக்கும்போதே அதற்கு முகம்காட்டிவிட வேண்டும் அதை பேராறு என ஓடவிட்டுவிடக்கூடாது என கான் பேசினார். சாப்ருவோ போராடுபவர்கள் இந்த மன்றம் கமிட்டி அமைப்பதையே நாளை கேள்விக்கு உள்ளாக்கலாம் -பின் எதற்கு கமிட்டி என வினவினார்.

காந்தி வட்டமேஜை மாநாடு வெற்றிபெறும் என்பதில் நம்பிக்கையில்லை என்ற கருத்தை வெளிப்படுத்தினார். காங்கிரஸ் செயற்குழு கூடி சட்டமறுப்பு வேண்டாம் என சொல்லியது. காந்தியும் பிப்ரவரி 1, 1922க்குள் அரசாங்கம் கோரிக்கைகளை சாதகமாக தீர்க்கவில்லையெனில் சட்டமறுப்பு என்றார். அரசாங்கம் பிப்ரவரி 6 அன்று சட்டமீறல்களை அனுமதிக்கமுடியாது என்கிற அறிக்கையை வெளியிட்டது.

சௌரி சௌராயடுத்து பர்தோலியில் கூடிய காங்கிரஸ் சட்டமறுப்பை நிறுத்தியதாக அறிவித்தது. லாலாஜி நமது தோல்வி நமது தலைவரின் மாண்பின் விகிதத்தில் இருக்கிறதென்றார். சுபாஷ், நேரு மட்டுமல்லாமல் மகாதேவ தேசாய் கூட ஏமாற்றத்தை வெளிப்படுத்தினார். பூர்ஷ்வா தலைமை மக்கள் எழுச்சி வரும்போது தடுத்துவிடுகின்றனர் என்ற விமர்சனத்தை கம்யூனிஸ்ட்கள் முன்வைத்தனர்.

நேருவிற்கு சௌரி சௌராக்குப் பின்னர் போராட்டம் விலக்கிக்கொண்டது சரியான செயலே என விளக்கி காந்தி கடிதம் எழுதினார். நாம் நிறுத்தியிராவிட்டால் அது அகிம்சை போராட்ட வடிவிலிருந்து மாறி வன்முறை போராட்ட வடிவமாகவே இருந்துவிடும். உணர்வின்றி போராட்டம் தடம் புரண்டுவிட்டது. உண்மையை பின்பற்றவேண்டும் என விழையும் எவரும் தனது அன்றாட குறைகளை தெளிவாக பார்க்கவேண்டிய நிலையில் இருப்பர். மிக எளிமையாகவும் இருப்பர். சௌரி சௌரா எனக்கான தண்டனை என்றே உணர்கிறேன் என காந்தி குறிப்பிட்டார். மனித சுபாவம் அப்படித்தான் என்றால் அதில் போய் நான் ஏன் தலையிடவேண்டும் எனக் கேட்டுக்கொண்டார். Our duty is only to see that it does not follow untruth while talking of truth and does not commit violence while talking of non- violence..I wished fast for 14 days but I let it be for 5 days. சௌரி சௌரா என்பது ஒருவகை பைத்தியக்காரத்தனம். அது நோய்.

# III

டாக்டர் என் என் சர்மா செளரி செளரா  Chauri Chaura Studies என்ற புத்தகம் ஒன்றை எழுதியுள்ளார். அதில் ஒத்துழையாமை பின்னணி, நிகழ்வு நடந்தவுடன் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என பேசப்பட்டுள்ளன. ஆனால் வழக்கின் விவரம் குறித்த வாசிப்பாக அது இல்லை. மக்களவை, காங்கிரஸ் கமிட்டியில் சொல்லப்பட்ட விவரங்கள் அவ்வாக்கத்தில் கிடைக்கின்றன.

பிரிட்டனில் மக்களவையில் மார்ச் 14, 1922 அன்று கர்னல் யேட்  பேசும்போது " 22 போலீஸ்காரர்கள் கொளுத்தப்பட்டு கொலை செய்யப்பட்டுள்ளனர். இதை காந்தியின் தொண்டர்கள் எனும் கூட்டம் செய்துள்ளது என்கிற கருத்தை முன்வைத்தார். பிப்ரவரி 9, 1922 அன்று நிலைமைகளை விளக்கி வைஸ்ராய் அனுப்பிய தந்தி மட்டும் 120 பவுண்ட் செலவைக்கண்டது.

மாவட்ட காங்கிரஸ் கமிட்டி சார்பில் அதன் தலைவர் அனுப்பிய குறிப்பில் கொடுமையான காட்சிகளைக் சொல்லக் காண்கிறோம்.

" இரண்டு கட்டிடங்கள் இப்போதும் எரிந்துகொண்டிருக்கின்றன.. 22 போலீஸ் சடலங்கள் தீயால் வெந்த நிலையில் காணப்படுகின்றன. அதைத்தவிர கதர் அணிஅந்த இரு சடலங்கள் கிடக்கின்றன. அவர்கள் சுடப்பட்டு இறந்துள்ளதாக பார்க்கமுடிகிறது. போலீஸ் நிலையத்தில் இருந்த அனைவரும் எரிந்து போய் இருப்பதாகவே தெரிகிறது. இரு போலீசார் வேறு வேலைக்கு சென்றதால் அவர்கள் பிழைத்துள்ளனர். ஒரு கான்ஸ்டபிள் தப்பித்துள்ளதாக அறிகிறோம்.

காந்தி போராட்டத்தை விலக்கிக்கொண்டார் எனக் கேட்பதும் அதற்கு அவர் சொல்லும் காரணங்களும் எங்களை திருப்தி செய்யவில்லை. முதல் ஒத்துழையாமை அதுவும் 1 1/2 ஆண்டுகளில் இப்படி முடிந்துவிட்டது. பல காங்கிரஸ் தலைவர்கள் இதை விமர்சித்து வருகின்றனர்.

எங்கள் பகுதியில் மந்தேரா பஜார் தீவிரமான இயக்கத்தைப் பார்த்தது. மதுக்கடைகளுக்கு எவரும் செல்லவில்லை. அந்நிய துணிகள் விற்கப்படவில்லை. பிப்ரவரி 1, 1922 அன்று மோசமான போலீஸ் அதிகாரி குப்தேஸ்வர் சிங் அந்தப் பகுதிக்கு வந்து சில தொண்டர்களை தாக்கியுள்ளார். அத்தொண்டருள் அரசாங்க பென்சனரும் ஒருவர் ( இராணுவத்திலிருந்து ஓய்வுபெற்றவரைத்தான் காங்கிரஸ் கமிட்டி இவ்வாறு சொல்கிறது). அவரை அவர் பென்சனை பறித்துவிடுவதாக மிரட்டியும் உள்ளார். இந்த நிகழ்வால் கொதிப்படைந்த மக்கள் பக்கத்து கிராமங்களிலிருந்து தும்ரிக்கு வரத்துவங்கினர். அன்று பிப்ரவரி 4 சனிக்கிழமை. 500லிருந்து 600பேர்கள்தான் கூடியிருப்பர். (சிலர் இந்நிகழ்வை பிப்ரவரி 5 என பதிவு செய்துள்ளனர்)

ஊர்வலம் தாணா  ( காவல்நிலையம்) நோக்கி சென்றது. உதவி ஆய்வாளரிடம் போராளிகளை ஏன் தாக்கினீர்கள் என சிலர் கேட்கத்துவங்கினர். இன்று தைரியம் இருந்தால் தடுத்துப்பார் என விவாதம் முற்றியது. கூட்டத்தின் பெரும்பகுதி

நகரத்துவங்கியது. ஆனால் கேட்ட அலறல் சத்தத்தால் பலரும் திரும்பினர். கல்லெறிய ஆரம்பித்தனர். அங்கிருந்த ஆயுத போலீசார் வான் நோக்கி சுடத்துவங்கினர். எவ்வளவு நேரம் துப்பாக்கி சூடு நடந்தது எனத்தெரியவில்லை. இருவர் கொல்லப்பட்டிருந்தனர். கூட்டத்தை இனி தடுக்கமுடியாதெனக் கருதிய காவலர்கள் உள்ளே சென்று தாழிட்டுக்கொண்டனர். கூட்டம் போலீஸ் நிலையத்திற்கு தீ வைத்தது. வெளியே வந்த போலீசார்களும் தாக்கப்பட்டு அவர்கள் மீது கெரோசின் ஊற்றப்பட்டது. தீயில் மீண்டும் அவர்கள் தூக்கி எறியப்பட்டனர். என்ற குறிப்பை அவர்கள் கொடுத்தனர்."

மேற்கூறிய குறிப்பை அமைப்பின் சார்பில் மாவட்டத்தலைவர் அனுப்பியதாக தெரிகிறது.

லார்ட் ரீடிங் இந்த நிகழ்வு குறித்த தனது 'கமெண்டில்' 21 பேர் அய்க்கிய மாகாண இந்த நிகழ்வில் கொளுத்தப்பட்டு கொலைசெய்யப்பட்டுள்ளனர். காந்தியின் போராட்ட அறைகூவலின் விளைவு இப்படியாகியுள்ளது. ஒழுங்கற்ற கும்பல் கிளப்பப்பட்டுவிட்டால் அவர்களை எவராலும் கட்டுப்படுத்தமுடியாது என்பதை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்ற மதிப்பீட்டை வைத்தார்.

லார்ட் ரீடிங் ஜனவரி 1922ல் தனது உணர்வை பதிவு செய்தார்.

" There is an opinion that under the guise of non violence Gandhi is really preparing eventually for revolution by violence..My own impressions are against prosecuting him merely for speeches at the congress, but to take action the moment he takes a definite step.. Nevertheless, I am quite prepared to face the consequences of Gandhi's arrest.

மாண்டேகு காந்தியை a mischievous individual and dangerous to the Indian empire என்றார்.

அலகாபாத் நீதிமன்றம் தனது இறுதி தீர்ப்பில் இந்த கும்பல் ஏதோ திரட்டப்படாத கும்பல் அல்ல. திட்டமிட்டே வந்து இந்த 'கசாப்புத்தனத்தை' செய்து போயுள்ளது கும்பல். இவர்களில் பலர் அப்பாவி உழவர்கள். அவர்களிடம் உண்மையை திரித்துக்கூறி அழைத்து வந்துள்ளனர். சிலருக்கு காந்தி ஏதோ அற்புதம் நிகழ்த்துபவர் என்ற எண்ணம் உருவாகியுள்ளது. நாங்கள் 38 பேர்களை மட்டுமே விடுவித்துள்ளோம். 19 பேருக்கு மரணதண்டனை வழங்கியுள்ளோம். 110 பேர்களுக்கு ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டுள்ளது என தெரிவித்தது.

டைம்ஸ் ஆப் இந்தியா 19 பேர்களின் கருணை மனுக்களை வைஸ்ராய் நிராகரித்தது சரியே என எழுதியது. கம்யூனிஸ்ட்களை வழிநடத்திக் கொண்டிருந்த ரஜினி பாமிதத் இங்கிலாந்தில் இவ்வாறு எழுதினார்.

The entire movement had been organised on the basis of complete discouragement of any mass activity and mechanical subordination to the will of one man, was inevitably thrown into helpless confusion and demoralisation by the bardoli decision".

பிப்ரவரி 12ல் கூடி போராட்டத்தை விலக்கிக்கொண்ட முடிவைத்தான் ரஜினி பாமிதத் இவ்வாறு விமர்சித்திருந்தார்.

ஏதோவொரு இடத்தில் இப்படி நடந்தததால் அகிம்சையுடன் நடக்கும் பல இடங்களிலும் ஏன் நிறுத்தவேண்டும் என்ற கேள்வியை மோதிலால் உட்பட பலரும் எழுப்பினர். லாலாஜி 75 பக்க அளவில் பெரும் குற்றப்பத்திரிகையை எழுதினார். அவர் தனது எழுத்தில் இவ்வாறு தெரிவித்திருந்தார்.

The fact is that no single man, however able, high minded, wise and sagacious can lead a movement of this nature without making mistakes. Mahatmaji's overconfidence in his judgement and his impulsiveness has often landed us, his humble colleagues, in very false positions but now we are simple routed, and the only thing for us to do is to be happy in our prison cells in the consciousness that atleast we have not contributed to the collapse of the movement.

சுபாஷ் அவர்களும் காந்தி ஏன் நிறுத்தினார் என்ற விமர்சனத்தை வைத்தார். போராளிகளின் உற்சாகம் ’பொங்குநிலையில்’ இருந்தபோது தேசத்திற்கு ஏற்பட்ட துயரம்தான். இதை அறியும் நேரத்தில் நான் தீனபந்துவுடன் இருந்தேன். அவர் மிகக்கடுமையான கோபத்தைக் காட்டினார். காங்கிரஸ் கமிட்டியில் காந்தி மீது ’சென்சூர்’ கண்டனத்தீர்மானம் ஒன்றை பி எஸ் மூஞ்சே  கொணர்ந்தார். ஆனால் அது வாக்கெடுப்பில் தோல்வியைக் கண்டது. காந்தி தன்மீது வந்த அனைத்து விமர்சனங்களையும் செவிமடுத்து தன் நிலையில் உறுதியாக இருந்தார்.

பிப்ரவரி 11, 12, 1922 கூடிய பர்தோலியில்  காங்கிரஸ் தீர்மானம் கீழ்கண்டவாறு அமைந்தது.

“ சௌரி சௌராவில் மனிதாபிமானமற்ற முறையில் கொடுமையாக போலீஸ்காரர்களை கொலைசெய்ததும், காவல்நிலையத்தை வேண்டுமென்றே தீக்கிரையாக்கியதும் கண்டிக்கதக்கது. காங்கிரஸ் இறந்த குடும்பங்களுக்கு அனுதாபத்தை தெரிவிக்கிறது.

காங்கிரஸ் கிளைகள் இனி பர்தோலி போராட்டத்தை நிறுத்திக்கொள்ளவேண்டும். வரிகளை அரசிற்கு கட்டவேண்டும் என கமிட்டி வேண்டுகிறது. கள்ளுக்கடைக்கு போவோரிடம் அமைதியாக காங்கிரஸ் கமிட்டி மேற்பார்வையில் அறிவுறுத்தல்களை செய்யலாம் .

கதர், நூற்பு, தீண்டாமை அனுசரிக்ககூடாது போன்றவற்றில் மெத்தனம் இருப்பதை சுட்டிக்காட்டி ஏராள புகார்கள் வருகின்றன.. எவர் தங்களை தன்னார்வலர்களாக பதிவு செய்துகொண்டு இவற்றை கடைபிடிக்கவில்லையோ அவர்களை பட்டியலிருந்து நீக்கிவிடலாம்.

காங்கிரஸ் எடுக்கக்கூடிய முடிவுகளை அமுல்படுத்தாமை, அமைப்புவிதிகளை பின்பற்றாமை நமது நோக்கத்தை விரைவு படுத்துவதில் தடைகளாக இருக்கும். இதைத்தவிர தேசியபள்ளிகள், கதர், ஒரு கோடி உறுப்பினர் சேர்ப்பு போன்றவற்றில்

கவனம் செலுத்தவேண்டும். குடிக்கு எதிராக மதுவிலக்கு பிரச்சாரம், பஞ்சாயத்துகளை நிறுவுதல் ஆகிய ஆக்கபூர்வ பணிகளில் ஈடுபட காங்கிரஸ் வேண்டியது.

ஹகிம் அஜ்மல்கான் பர்தோலி தீர்மானங்கள் என்பதற்கு பொருள் இயக்கமே நின்று போவதென்பதல்ல. வேறு ஆக்கபூர்வ செயல்களை செய்துகொண்டேயிருக்கவேண்டும் என அறிவுறுத்தினார். அலிகார் மாணவர்கள் கடுமையாக காந்தியை விமர்சித்து தீர்மானம் இயற்றினர். காந்திக்கு எதிராக வீசும் காற்றை பயன்படுத்திக்கொள்ள அரசாங்கம் விரும்பியது.

டெல்லியில் பிப்ரவரி 24, 1922ல் காங்கிரஸ் கமிட்டி கூடியது. கிலாபத் கமிட்டியும் கூடியது. காந்தி தன் தீர்மானத்தை முன்மொழிந்தார். காங்கிரஸ் திட்டத்தை அனைவரும் புரிந்துகொள்ளவேண்டும் என்றும் கள்ளுக்கடை எதிர்ப்பு போலவே அந்நியத்துணிகள் பகிஷ்கரிப்பும் அவசியம் என்றார். நாம் மேற்கொள்ளும் முறையான ஒத்துழையாமையால்தான் நம்மிடம்கூட சமத்துவம் மற்றும் நட்பு உருவாகும். எங்கு அரசாங்கம் மக்களின் விருப்பத்திற்கு செவி சாய்ப்பதில்லையோ அங்கெல்லாம். சட்டமறுப்பை காங்கிரஸ் தனது உரிமை மற்றும் கடமையாக வரித்துக்கொண்டுள்ளது.

காந்தி யங் இந்தியாவில் (16 மார்ச் 1922) தனது குற்றம் என பகிரங்கப்படுத்தி செளரி செளரா வன்முறைப்பற்றி எழுதினார். இந்தியா இன்னும் உண்மைக்கும் அகிம்சைவழி சூழலுக்கும் தயாராகவில்லை. நமது அகிம்சைவழி இயக்கம் வெறுப்பையும் 'கிரிமினல்' தன்மையையும் கொண்டிருக்கமுடியாது. நம்மீதான கோபமூட்டுதல் என்பதை காரணமாக்கி வன்முறையில் ஈடுபடுவதை ஏற்கமுடியாது. அது ஆரோக்கிய முறையாகாது. நமது நாட்டில் அகிம்சை வழி சுயராஜ்யம் எழவேண்டுமெனில் அதற்கு வன்முறை சக்திகள் கட்டுக்குள் வருவது முக்கியமானதாகும். பலருக்கு என்னிடம் விமர்சனம் இருக்கலாம். மாறுபாடும் இருக்கலாம். ஆனாலும் எனது நிலையை எனது வாதங்களை அவர்கள் பொருட்படுத்தி கேட்டுள்ளனர். என்னிடம் உள்ள நன்னடைத்தைகள் என்பன வாய்மையும் அகிம்சையும்தான். வேறு அதீத சக்திகள் என ஏதும் இல்லை. என்னிடம் தவறுகள் இருக்கலாம்- எனக்கு எல்லைகள் இருக்கிறது. பர்தோலியின் சிறப்பு அங்கு நடைபெறுவதில் மட்டுமில்லை. நாடுமுழுதும் காணப்படும் அமைதியில்தான் இருக்கிறது. சிவில் ஒத்துழையாமை என்பது தாக்குதலுக்கு எதிர் தாக்குதல் என கல்லெறிவதில் இல்லை. நம்மீதுன் வரும் உடல்தாக்குதல்களை சகித்துக்கொண்டு தாங்கி உறுதியாக நம் நிலைப்பாட்டிற்காக நிற்றல்.

காந்தி தனது நிலைப்பாட்டை இவ்வாறு விளக்கியிருந்தார்:

காந்தியின் பதிலில்

I have advised suspension of civil disobedience because the violence practised near Gorakhpur was not individual, not in connection with any private wrong but from a vague sense of political wrong. 1 do not despair of the people bearing the necessity of self-restraint on occasions such as at Chauri Chaura which led to popular violence. Under much graver provocation the masses have remained calm during the year almost all over India, as when public meetings have been forcibly broken up. These were all occasions for outbreak of mob fury but the people have kept exemplay restraint. I believe that slowly but surely the spirit of non-violence is spreading. It is really not so difficult or impracticable as the string of questions

put to ihe suggests. The incident at Chauri Chaura would have been impossible if the Congress and the Khilafat organizations were perfect. It is all a question of perfecting the Congress organization. And it is ABC of political science that you can do little unless you have got a fairly good organization.

The Government succeeds because it can offer organized violence. The Congress will succeed when its organization which is based on non-violence is also perfected. The constructive programme mapped by the Working Committee is an attempt in that direction. It should also be remembered that non- violence being an organic charage can be organized in much less time than violence. Think of what India has done in the way of non-violence during the 18 months--calculate the generations that must elapse before you can teach India the use of arms.

சௌரி சௌராவின் குற்றம் என காந்தி எழுதியதை இதுவரை நான் பார்த்த மிகச் சிறந்த human document என ரொமய்ன் ரோலந்த் குறிப்பிட்டார். மார்ச் 10, 1922ல் யங் இந்தியா கட்டுரைகளுக்காக தேசத்துரோக வழக்கில் அவருக்கு 6 ஆண்டுகள் தண்டனை வழங்கப்பட்டது. அவரது உரையில் இந்த அரசாங்கத்தின் மீதான disaffection தனக்கு ஏற்பட்டதை அவர் சுட்டிக்காட்டினார். தன்னை விடுவித்தால் நெருப்புடன் விளையாடுவதையே திரும்ப செய்யவிருப்பதாகவும் தெரிவித்தார்.

காந்தி மார்ச் 10, 1922ல் கைது செய்யப்படுகிறார். மாவட்ட செஷன்ஸ் நீதிபதி அகமதாபாத் புரூம்பீல்ட் முன்னிலையில் வழக்கு மார்ச் 18ல் தொடங்கியது. சரோஜினி நாயுடு வழக்கு விசாரணையை கண்ணுற்றார். காந்தியடிகள் கைதை மாபெரும் தவறு என்று மாளவியா கண்டித்தார்.

சௌரி சௌரா தொடர்பாக 225 பேர்கள் மீது வழக்கு தொடுக்கப்பட்டு கோரக்பூர் செஷன்ஸ் நீதிபதி எச். இ. ஹோம்ஸ் முன்னிலையில் ஆஜர்படுத்தப்பட்டனர். அங்கு 170 பேருக்கு தூக்கும், இருவருக்கு இரண்டு ஆண்டுகள் கடும்சிறையும் கொடுக்கப்பட்டது. 47 பேர்கள் விடுவிக்கப்பட்டனர். சிறையிலேயே 6 பேர் மரணமுற்றனர். இந்த தீர்ப்பு ஜனவரி 9 1923ல் வந்தது. எம் என் ராய் இதை 'legalised murder' என விமர்சித்து பொதுவேலைநிறுத்த அறைகூவல் விடுத்தார். மேல்மனுவில் அலகாபாத் உயர்நீதிமன்றம் தனது தீர்ப்பை ஏப்ரல் 30, 1923ல் தந்தது. கீழ்கண்ட 19 கலகக்காரர்களுக்கு மட்டும் தூக்கு என்று தீர்ப்பு எழுதினர்.

நாசர் அலி, பகவான் அகிர், லால்முகமது, அப்துல்லா, ஷ்யாம் சுந்தர், துதி சிங், காளிசரண், லவுட்டிகுமார், மகாதேவ் சிங், மேகு அலி, ரகுவீர், ராம்லகான், ராம்ரூப், சகாதேவ், ருடாலி, மோகன், சம்பத், சீதாராம், ஷ்யாம் ஆகியோர் மரணதண்டனை பெற்றனர். 14 பேருக்கு ஆயுள்தண்டனை. 19 பேருக்கு 8 ஆண்டுகள் சிறை, 57 பேர்களுக்கு 5 ஆண்டுகள், 20 பேர்களுக்கு 3 ஆண்டுகள், 3 பேருக்கு 2 ஆண்டுகள் தண்டனை வழங்கப்பட்டது. 38 பேர் விடுவிக்கப்பட்டனர். தூக்குதண்டனை ஜூலை 2 முதல் 11, 1923 என்கிற காலத்தில் நிறைவேற்றப்பட்டன.

இறந்து போன காவலர்கள் பட்டியலில் : ஆய்வாளர் குப்தேஸ்வர் சிங், துணை ஆய்வாளர் பிரித்வி பால், காவலர்களான பஷீர்கான், கபில்தேவ் சிங், லகாய் சிங், ரகுவீர் சிங், முகம்மதுகான், ஹாசன் கான், கதபாட்சா கான், ஹாசன் கான், ஜமாகான், ரம்பாலி பாண்டே, கபில், இந்திரசென், ராம்லகான், மர்தானா கான், ஜக்தேவ், ஜெய்கை சிங்,

சௌக்கிதார்களான வாசிர், கிசை ராம், கட்வாரு ராம், மங்கல் சௌபே, விகேஷ்வர் சிங் ஆகியோர் பெயர்கள் இருந்தன. ஜதை ராம் என்பவரை கூட்டம் சிதையில் தூக்கி எறிந்தபோதும் அவர் தப்பித்தார். ஆனால் மருத்துவமனையில் அவர் இறந்தார்.

சௌரி சௌராவின் பின்னணி குறித்து தனது ஆய்வில் சர்மா இவ்வாறு தந்துள்ளார். பிப்ரவரி 1, 1922 அன்று கோபஸ்வர்சிங் துணை ஆய்வாளர் அந்தப் பகுதி நிலப்பிரபுவின் ஏஜெண்டாக செயல்பட்ட தயாள் ரகுபீர் மீது கைவைத்தார். இரண்டு கசையடியும் எல்லைமீறி கொடுத்துள்ளார். அடுத்தநாள் பிப்ரவரி 2 அன்று பகவான் மற்றும் சில தன்னார்வலர்கள் போலீஸ் நிலையம் சென்று சமரச முயற்சியில் ஈடுபட்டனர்.

தும்ரியில் கூடிய ஊர்க்காரரர்கள் ஏன் துணை ஆய்வாளர் நம்மை அடிக்கிறார்- கைது செய்யவிரும்பினால் செய்யலாமே தவிர எதற்கு அடிக்கவேண்டும். இதற்கான நியாயம் கேட்போம் என முடிவெடுத்தனர். பிப்ரவரி 4 1922 சனிக்கிழமை. இதைப்பற்றி லால் முகம்மது கோரக்பூர் கிலாபத் கமிட்டிக்கு தெரியப்படுத்துகிறார். சில ஆவணங்களை பிப்ரவரி 5 அன்று அந்த அலுவலகத்திலிருந்து கைப்பற்றுகின்றனர்.

மார்ச் 13 1922 அன்று நீதிமன்றத்தில் பகவான்  வாக்குமூலத்தில் இரு முசல்மான்கள் கண்ணாடி அணிந்து வந்தனர். சௌகத், முகமது அலி குறித்த எழுச்சி உரை ஆற்றினர். கூட்டத்தில் சிலர் உடனடியாக காவல்நிலையம் செல்வோம் என கத்தினர் என சொல்லியதாக நீதிமன்ற பதிவு செல்கிறது. ஆனால் மார்ச் 4ல் வாக்குமூலம் கொடுத்த ரகுபீர் அங்கு ஒரு ”பாபு” வந்தார். அவர் முந்தேரா பஜார்- போலீஸ் நிலையம் பக்கம் போகவேண்டாம். கலவரம் வரலாம் என எச்சரித்ததாக பதிவு செய்கிறார். அந்த பெரியவரை பொருட்படுத்தாமல் நாம் சாகத்தயாரா என குரல்கள் எழுந்தன.

நாசர் அலி என்பவர் நான் போலீஸ் நிலையம் செல்வது அடிவாங்கத்தானே தவிர அடிகொடுக்க அல்ல என பேசியியுள்ளார். சிக்ரி( அப்ரூவர் ஆனவர்) என்பவரின் சாட்சியத்தில் கூட்டம் 3000 அளவில் பெருகிக்கொண்டேயிருந்தது. தானா வந்தவுடன் துப்பாக்கி ஏந்திய போலீசாரைக் கண்டோம். கலவரம் எழும் என தோன்றிவிட்டது. குப்தேஸ்வர் சிங் தனது காவலர்களுடன் எங்களை தாக்கத்தான் நிற்கிறார் என கூட்டம் புரிந்துகொண்டுவிட்டது என சொல்லியுள்ளார்.

சர்தார் ஹரிசரண் சிங் சொல்லிய சாட்சியத்தில் வந்தோர் எண்ணிக்கை 4000 பேர்கள் என தெரிவிக்கப்படுள்ளது. அவர்களின் தலைவர்களாக இருந்த நாசர் அலி, ஷ்யாம் சுந்தர், சிக்ரி ஆகியோருடன் சமரசம் எட்ட முயற்சித்தோம். ஆனால் அவர்கள் சௌரி சௌரா காவல்நிலயம் போயே தீருவோம் எனச் சொல்லி சென்றனர். குப்தேஸ்வர்சிங்கையும் அவர்கள் காவல்நிலையம் தாண்டி முழுமையாக போகும்வரை பொறுமையாக இருந்திட வேண்டினோம். அவர் நிதானம் காட்டியிருந்தால் இந்த மோசமான நிகழ்வை தவிர்த்திருக்க முடியும். வாக்குவாதத்தின் போது நான் தாக்கியவர் உங்களை சேர்ந்தவரே அல்லர். அவர் அரசாங்க பென்சனர். நீங்கள் கேட்பது சரியல்ல என கோபேஷ்வர் சொன்னதாக நீதிமன்றம் பதிவிட்டுள்ளது.

# IV

இப்பகுதியில்  ஒத்துழையாமையைத் தொடர்ந்து சௌரி சௌரா நிகழ்வையடுத்து காந்தி போராட்டத்தை விலக்கிக்கொண்டது குறித்து வெவ்வேறு ஆளுமைகள்- வரலாற்று ஆசிரியர்கள் என்ன பதிவைத்தந்துள்ளனர் என்பது அப்படியே அவர்கள் எழுத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரே  இடத்தில் கிடைக்கப்பேறும் தொகுப்பு என்ற வகையில் ஆர்வலர்களுக்கு பயனுள்ளதாக அமையலாம்.

முதலில் 'தமிழ்நாட்டில் காந்தி' அ.ராமசாமி அவர்களின் ஆக்கத்தில் உள்ள பதிவைக் காண்போம்.

ஒத்துழையாமை ஆகஸ்ட் 1, 1920ல் துவங்கியது. அன்று திலகர் மறைந்தார். ஒத்துழையாமையில் இந்து முஸ்லிம்கள் இணைந்து பங்குகொள்வதற்கு ஏதுவாக காந்தியும் சௌகத் அலியும் சுற்றுப்பயணம் மேற்கொண்டனர். ஆகஸ்ட் 12ல் தமிழ்நாட்டிற்கு வந்தார்கள். காந்தி சுற்றுப்பயணத்தை தடுக்கலாம் என்ற மாநில அரசாங்கத்தின் எண்ணத்தை மத்திய அரசாங்கம் தலையிட்டு தடை எதுவும் வேண்டாம் எனச் சொல்லியதாக தமிழ்நாட்டில் காந்தி புத்தகத்தில் ராமசாமி தந்துள்ளார்.

ஒத்துழையாமை காலத்தில் தமிழ்நாட்டில் காந்தியடிகளின் சுற்றுப்பயணம் கூட்டங்கள், சந்திப்புகள் குறித்த விரிவான பதிவை அப்புத்தகத்திலிருந்து அறியலாம். அவர் அரை ஆடைக்கு மாறிய புரட்சிகர மாற்ற நிகழ்வும் இக்காலத்தில் நிகழ்ந்ததைக் காண்கிறோம். சென்னை பொது வேலைநிறுத்தம் கலவரங்கள், சர் பி தியாகராயர் வீட்டை முற்றுகையிட்ட செயல் அனைத்தையும் காந்தி கண்டித்திருந்தார்.. சென்னை கலவரத்தை சுட்டிக்காட்டி இந்தியாவின் பிற பகுதிகள் அகிம்சைவழிமுறையில் மிகக் கவனமாக இருக்கவேண்டும் என அவர் வலியுறுத்திவந்தார். சென்னை காங்கிரஸ் தலைவர்கள் தவறுகளுக்கு பொறுப்பேற்பர் என நம்புவதாகவும் தெரிவித்தார். ஒத்துழையாமை செய்பவர்கள் நம்பிக்கைமோசம் செய்கிறார்கள் என்ற குற்றச்சாட்டையும் சுப்ரமணிய சிவாவை முன்வைத்து அரசாங்கம் வைத்தது. அரசிற்கு வாக்கு கொடுத்திருந்தால் சிவா அதன்படி  நடக்கவேண்டும்- அதை மக்கள் பார்வைக்கும் வைத்துவிடவேண்டும் என காந்தி அறிவுறுத்தியிருந்ததையும் பார்க்கிறோம்.

சௌரி சௌரா குறித்து தமிழ்நாட்டில் காந்தி புத்தகம் இவ்வாறான பதிவைக்கொண்டிருக்கிறது.

" உத்தரபிரதேசத்திலுள்ள கோரக்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு கிராமம் சௌரி சௌரா. அங்கு வன்முறை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றுவிட்டது. மக்களுடைய ஊர்வலம் நடந்துமுடிந்த பின்னர், கலைந்து சென்றவர்களைப் போலீசார் சிலர் கேலி செய்தார்கள். இதனால் அவர்களுக்கிடையே வாக்குவாதம் முற்றிக்கூட்டம் திரண்டது; போலீசார் துப்பாக்கியால் சுட்டனர். அவர்களுடைய துப்பாக்கி ரவைகள் எல்லாம் தீர்ந்தவுடன்தான் போலீஸ் நிலையத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். ஆத்திரமடைந்த மக்கள் கூட்டமாகப் போலீஸ்நிலையத்திற்கு சென்று தீ வைத்தனர். உயிரைக் காப்பாற்றிக்கொள்ள 22

போலீசார் வெளியே வந்தபோது அவர்களைத் துண்டு துண்டாக வெட்டித் தீயில் போட்டு எரித்துவிட்டார்கள்.

போலீசார் எரிந்துவிட்டார்கள் என்று கேள்விப்பட்டபோது, காந்திஜியின் உள்ளமும் எரிந்தது. அவர் அதிர்ச்சியடைந்தார். காங்கிரஸ் செயற்குழுவை வேண்டி சட்ட மறுப்பை நிறுத்தி அதற்குப்பதிலாக நிர்மாணத் திட்டத்தைச் செயல்படுத்தினார். பிராயச் சித்தமாக அய்ந்து நாட்கள் உண்ணாநோன்பு இருந்தார். மக்கள் சட்டமறுப்பைத் தொடங்குவதற்கு இன்னும் இந்தியா தயாராகவில்லை என்று மூன்றாவது முறையாக ஆண்டவன் தனக்கு அளித்த எச்சரிக்கையாக கருதினார். சென்னை எனக்கு எச்சரிக்கை தந்தது. ஆனால் நான் அதைப் பொருட்படுத்தவில்லை. இப்போது சௌரி சௌராவின் மூலம் ஆண்டவன் தெளிவாகத் தன்னுடைய கருத்தை எனக்குக் கூறிவிட்டார் என்றார்..”

திரு வி க எழுதிய வாழ்க்கை குறிப்புகளில் (நான் பார்த்த அளவில்) முதல் பாகத்தில் ஒத்துழையாமை பகுதியில் அவர் சௌரி சௌரா நிகழ்வு குறித்த எந்த பதிவையும் செய்ததாக தெரியவில்லை. ஆனால் திரு வி க மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் என்பதில் இது குறித்து பேசிய வரிகள் இருக்கின்றன. திரு வி க எழுதுகிறார் :-

“ ஒத்துழையாமை இயக்கம் நாட்டில் காட்டுத்தீப் போல் பரவி வந்த வேளையில் இளவரசர் இந்தியா போந்தார். அவர் அதிகாரவர்க்க விருந்தினராக வருதலால், அவரது வரவேற்பில் நாட்டவர் கலவாது நிற்பதே அவர்க்குச் சிறப்பு செய்வதாகும் என்ற ஆணை காந்தியடிகள் வாயிலாகப் பிறந்தது. இவ்வாணைக்கு மறுப்பும் எழுந்தது. ஒத்துழைப்பாளர் பெரிதும் பாரசீகரும் கிறிஸ்துவரும் இளவரசர் வரவேற்பில் கலந்துகொண்டனர். அதுகண்ட ஒத்துழையாதார் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் அவரைத் தாக்கி நையப்புடைத்தனர். கலகம் மூண்டது. அவ்வேலையில் அன்னிய துணிப்பொதியை ஓரிடத்தில் தீக்கிரையாக்கி திரும்பிய காந்தியடிகட்குக் கலகம் காட்சி அளித்தது. அதைக் கண்ட அடிகள் அமைதி நிலவும் மட்டும் உணவு உண்ணப்போவதில்லை என்று எவரும் அஞ்சத்தக்க நோன்பு கொண்டனர். அமைதி காக்கிறோம்; உணவு கொள்ளுங்கள் என்று உறுதிமொழி.. பின்னே உண்ணா நோன்பு நிறுத்தப்பட்டது.

ஐக்கிய மாகாணத்தில் கோரக்பூர் ஜில்லாவில் சௌரி சௌரா என்றொரு சிற்றூர் உண்டு. அவ்வூரில் எதன் பொருட்டோ ஓர் ஊர்வலம் நடைபெற்றது. அவ்வூர்வலத்தில் போலீசாருக்கும் பொதுமக்களுக்கும் போர் மூண்டது. போலீசார் துப்பாக்கியால் மக்களை நோக்கிச் சுட்டுப் போலீஸ் நிலையஞ் சேர்ந்தனர்; மக்கள் வெகுண்டெழுந்து, அடிகள் பெயரை முழக்கிப் போலீஸ் நிலையம் நுழைந்து அதனையும் அதனுள்ளிருந்த சேவகரையும் தீக்கிரையாக்கினார்கள். உயிரோடு மக்களை நெருப்பிலிட்டு எரிப்பதினும் ஹிம்சை வேறொன்றிருக்குமோ?..சீற்றம் நெருப்பாகி மனிதரை எரிக்கிறது.

.. மாசிலாமனத்தார்- ஈசனிடத்தன்பர்- கொல்லா விரதங்கொண்ட நல்லார் காந்தியடிகள் என் செய்தார்?அடிகள் போரை பர்தோலியை மறந்தார். அவரது உள்ளம் சௌரி சௌராவிற்கு ஓடிற்று; தீக்கிரையான உயிர்கள் மீது நிலைத்தது... அது குறித்து அடிகள்

யங் இந்தியாவில் எழுதிய உரைகளை நேயர்கள் நோக்குவார்களாக. அவைகளுள் சில வருமாறு:-

ஆண்டவன் என்பால் பேரன்புடையவனாகயிருக்கிறான். ஒன்றிய சட்ட மறுப்புக்குரிய உண்மையையும் அஹிம்சையும் கொண்ட ஒரு நிலையை இன்னும் இந்தியா எய்தவில்லை என்று அவன் எனக்கு மூன்றாம் முறையாக எச்சரிக்கை செய்தான். அமைதி, உண்மை, தாழ்மை, அன்பு, தீச்செயலின்மை, காழ்ப்பின்மை முதலியன கொண்டதே நீதி.....

ஆண்டவன் சௌரி சௌரா வாயிலாக எனக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தினான்..உண்மையையும் அகிம்சையுமே என்னால் விரும்பப்படுவன, தெய்வீகத்தை யான் விரும்பவில்லை.

ஹிம்சை எழுச்சியை அகிம்சையால் அடக்கி ஆள்வது அகிம்சையின் வழி சுய ஆட்சி பெறுதற்கு அறிகுறி.

சௌரி சௌரா நிகழ்ச்சி, பர்தோலியை பாதியாது என்று வாதிக்கப்படுகிறது...கலப்பாலுக்கு ஒரு துளி நஞ்சு சாலுமன்றோ? சௌரி சௌரா உமிழ்ந்த நஞ்சம் பர்தோலியைக் கெடுப்பதாகும்.

காந்தி எவ்வாறெல்லாம் அதனை எழுதிச் சென்றார் என்பதை திரு வி க எடுத்துக்காட்டியுள்ளதை காண்கிறோம். கூட்டத்தினர் அடிகள் பெயரை அழைத்துக்கொண்டே வன்முறையில் ஈடுபட்டனர் என்கிற பதிவு இவரிடத்தில் மட்டும்தான் காணப்படுகிறது. இதற்கு ஆதாரமாக திரு வி க எதையும் சுட்டவில்லை. ஆனால் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி ஆவணத்தில் காந்தி தனது மைந்தர் தேவதாஸ் அவர்களுக்கு எழுதிய கடிதவரிகளில் இது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**John Keay** எழுதிய **India** என்ற புத்தகம் இந்திய வரலாறு குறித்து பேசப்படும் சிறப்பான புத்தகங்களில் ஒன்று. இதில் சௌரி சௌரா குறித்து ஜான் கீ ஏதாவது எழுதியுள்ளாரா என பார்த்ததில் கீழ்கண்ட வரிகள் மட்டுமே அவரால் சொல்லப்பட்டுள்ளன

Then came news from UP of mob violence in which 22 Indian constables had been burnt to death in their own police station. For Gandhi it was the last straw. India was obviously not ready for self rule. He retired to his spinning wheel, was promptly arrested for past incitements, pleaded guilty, and successfully secured the maximum six year sentence; he thought of it more as a penance

கீ குறிப்பிட்ட வரியில் கவனிக்கத்தகுந்த அம்சம் அவர் குறிப்பிட்டு சொல்லும் போலீஸ்காரர்கள் இந்தியர்கள் என்பதாக இருக்கிறது. இந்த மாதிரி போலீஸ்காரர்கள் இந்தியர் என்ற பதிவை வேறு ஆக்கங்களில் நம்மால் காணமுடியவில்லை.

வரலாற்றாசிரியர் பிபின் சந்திரா எழுதிய மாடெர்ன் இண்டியா புத்தகம் தோழர் சிசுபாலன் மொழிபெயர்ப்பில் தமிழிலும் நவீனகால இந்தியா என வந்துள்ளது. ஆங்கில மூலத்தில் சௌரி சௌரா பற்றி காணப்படும் வரிகள் அப்படியே கீழே தரப்பட்டுள்ளன.

பிபின் பதிவில் சௌரி சௌரா நாள் 5 பிப்ரவரி எனக் காட்டப்பட்டுள்ளது. காங்கிரஸ் ஊர்வலம் எனச் சொல்கிறார்.

On Feb 1, 1922 Mahatma Gandhi announced that he would start mass civil disobdience, including non payment of taxes unless within seven days the political prisioners were released and the press freed from government control.

This mood of struggle was soon transformed into retreat. On 5th Feb, a congress procession of 3000 peasnats at Chauri Chaura, a village in the Gorakhpur Distirct of UP was fired upon by the police. The angry crowd attacked and burnt the police station causing the death of 22 policemen. Gandhiji took a very serious view of this incident. It convinced him that the nationalised workers had not yet properly understood nor learnt the practice of non violence without which, he was convinced, civil disobedience could not be success. Apart from the fact that he would have nothing to do with violence, he also perhaps believed that the British would be able to crush easily a violent movement, for the people had not yet built up enpough strength and stamina to resist governemnt suppression. He therefore decided to suspend the nationalist campaign"

பிப்ரவரி 12 பர்தோலி தீர்மானம் அது குறித்து எழுந்த விமர்சனங்களை பிபின் சந்திரா பின்னர் சொல்லி செல்கிறார்.

மற்றொரு மிக முக்கிய ஆக்கமான INDIA'S STRUGGLE FOR INDEPENDENCE 1857-1947 என்பதும் பெரிய புத்தகம். அதை BIPAN CHANDRA, MRIDULA MUKHERJEE, ADITYA MUKHERJEE, K N PANIKKAR ,SUCHETA MAHAJAN ஆகிய ஐவரும் ஆசிரியர்களாக இருந்து தொகுத்துள்ளனர். அதில் செளரி செளரா பின்னணி, போராட்ட விலக்கம், காந்தியார் மீது எழுந்த விமர்சனங்கள், அதில் நியாயம் இருக்கிறதா என்கிற அமசங்கள் இடம் பெற்று இருப்பதைக் காணமுடியும். அதில் இடம் பெற்றுள்ள வரிகளை அப்படியே தந்துள்ளேன். சற்று நீளமான பகுதியாக இருந்தாலும் விவாதங்களை கொண்ட பகுதி என்பதால் புரிதலுக்கு உதவும்.

இங்கும் பிப்ரவரி 5 என்றே நாள் சொல்லப்பட்டுள்ளது. காந்தி மீது ரஜினி பாமிதத் உட்பட பலர் வைத்த விமர்சனம்- அவர் சொத்துடைமையாளர்களை காப்பாற்ற நினைக்கிறார் என்று சென்றது. காந்தி மீது எழுந்த விமர்சனங்களில் எந்த நியாயமும் இல்லை என இந்த ஆசிரியர்கள் தங்கள் வாதங்களை கீழ்கண்ட வரிகளில் முன்வைப்பதைக் காணலாம்.

Bardoli taluq had been selected in 1922 as the place from where Gandhiji would launch the civil disobedience campaign, but events in Chauri Chaura had changed all that and the campaign never took off.

Gandhiji had been under considerable pressure from the Congress rank and file as well as the leadership to start the phase of mass civil disobedience. The Ahmedabad session of the Congress in December 1921 had appointed him the sole authority on the issue. The Government showed no signs of relenting and had ignored both the appeal of the All- Parties Conference held in mid-January 1922 as well as Gandhiji's letter to the Viceroy announcing that, unless the Government lifted the ban on civil liberties and released political prisoners, he would be forced to go ahead with mass civil disobedience. The Viceroy was unmoved and, left with no choice, Gandhiji announced that mass civil disobedience would begin in Bardoli taluqa of Surat district, and that all other parts of the country should cooperate by maintaining

total discipline and quiet so that the entire attention of the movement could be concentrated on Bardoli. But Bardoli was destined to Wait for another six years before it could launch a no-tax movement. Its fate was decided by the action of members of a Congress and Khilafat procession in ChauriChaura in Gorakhpur district of U.P. on 5 February 1922.

Irritated by the behavior of some policemen, a section of the crowd attacked them. The police opened fire. At this, the entire procession attacked the police and when the latter hid inside the police station, set fire to the building. Policemen who tried to escape were hacked to pieces and thrown into the fire. In all twenty-two policemen were done to dead. On hearing of the incident, Gandhiji decided to withdraw the movement. He also persuaded the Congress Working Committee to ratify his decision and thus, on 12 February 1922, the Non-Cooperation Movement came to an end....

Many later commentators, following, the tradition established by R. Palme Dutt in India Today, have continued to condemn the decision taken by Gandhiji, and seen in it proof of the Mahatma's concern for the propertied classes of Indian society. Their argument is that Gandhiji did not withdraw the movement simply because of his belief in the necessity of nonviolence. He withdrew it because the action at Chauri Chaura was a symbol and an indication of the growing militancy of the Indian masses, of their growing radicalization, of their willingness to launch an attack on the status quo of property relations.

Frightened by this radical possibility and by the prospect of the movement going out of his hands and into the hids of radical forces, and in order to protect the interests of landlords and capitalists who would inevitably be at the receiving end of this violence, Gandhiji cried halt to the movement. They have found supportive proof in the resolution of the Congress Working Committee of 12 February 1922 popularly known as the Bardoli resolution which while announcing the withdrawal, asked the peasants to pay taxes and tenants to pay rents. This, they say, was the real though hidden motive behind the historic decision of February 1922.

It seems, however, that Gandhiji's critics have been less than fair to him. First, the argument that violence in a remote village could not be a sufficient cause for the decision is in itself a weak one. Gandhiji had repeatedly warned that he did not even want any non-violent movement in y other part of the country while he was conducting mass civil disobedience in Bardoli, and in fact had asked the Andhra PCC to withdraw the permission that it had granted to some of the District Congress Committees to start civil disobedience. One obvious reason for this was that, in such a situation of mass ferment and activity, the movement might easily take a violent turn, either due to its own volatile nature or because of provocation by the authorities concerned (as had actually happened in Bombay in November 1921 and later in Chauri Chaura); also if violence occurred anywhere it could easily be made the excuse by the Government to launch a massive attack on the movement as a whole. The Government could always cite the actual violence in one part as proof of the likelihood of violence in another part of the country, and thus justify its repression. This would upset the whole strategy of non violent civil disobedience which was based on the principle that the forces of repression would always stand exposed since they would be using armed force against peaceful civil resisters. It was, therefore, not enough to assert that there was no connection between Chauri Chaura and Bardoli.

It is entirely possible that in Gandhiji's assessment the chances of his being allowed to conduct a mass civil disobedience campaign in Bardoli had receded further after Chauri Chaura. The Government would have had excuse to remove him and other activists from the scene and use force to cow down the people. Mass civil disobedience would be defeated even before it was given a fair trail. By taking the onus of withdrawal on himself and on the Working Committee, Gandhiji was protecting the movement from likely repression, and the people from demoralization. True, the withdrawal itself led to considerable demoralization, especially of the active political workers, but it is likely that the repression and crushing of the movement (as happened in 1932) would have led to even greater demoralization.

Perhaps, in the long run, it was better to have felt that, if only Gandhiji had not withdrawn the movement, it would have surged forward, than to see it crushed and come to the conclusion that it was not possible for a mass movement to succeed in the face of government repression. It is necessary to remember that, after all, the Non Cooperation Movement was the first attempt at an all-India mass struggle against the British, and a serious reverse at this elementary stage could have led to a prolonged period of demoralization and passivity.

The other argument that the real motive for withdrawal was the fear of the growth of radical forces and that Chauri Chaura was proof of the' emergence of precisely such a radical sentiment is on even thinner ground. The crowd at Chauri Chaura had not demonstrated any intention of attacking landlords or overturning the structure of property relations, they were merely angered by the overbearing behavior of policemen and vented their wrath by attacking them.

Peasant unrest in most of Avadh and Malabar had died out long before this time, and the Eka movement that was on in some of the rural areas of Avadh showed no signs of wanting to abolish the zamindari system; it only wanted zamindars to stop 'illegal' cesses and arbitrary rent enhancements. In fact, one of the items of the oath that was taken by peasants who joined the Eka movement was that they would 'pay rent regularly at Kharif and Rabi." The no-tax movement of Guntur was very much within the framework of the Non-Cooperation Movement; it was directed against the government and remained totally peaceful. Moreover, it was already on the decline before February 1922. It is difficult to discern where the threat from radical tendencies is actually located.

That the Bardoli resolution which announced the withdrawal also contained clauses which asked peasants to pay up taxes and tenants to pay up rents, and assured zamindars that the Congress had no intention of depriving them of their rights, is also no proof of hidden motives. The Congress had at no stage during the movement sanctioned non-payment of rent or questioned the rights of zamindars; the resolution was merely a reiteration of its position on this issue. Non-payment of taxes was obviously to cease if the movement as a whole was being withdrawn.

Gandhiji's critics often fail to recognize that mass movements have an inherent tendency to ebb after reaching a certain height, that the capacity of the masses to withstand repression, endure suffering and make sacrifices is not unlimited, that a time comes when breathing space is required to consolidate, recuperate, and gather strength for the next round of struggle, and that, therefore, withdrawal or a shift to a phase of non-confrontation is an inherent part of a strategy of political action that is based on the masses. Withdrawal is not tantamount to betrayal; it is an inevitable part of the strategy itself.

Of course, whether or not the withdrawal was made at the correct time can always be a matter open to debate. But perhaps Gandhiji had enough reasons to believe that the moment he chose was the right one. The movement had already gone on for over a year, the Government was in no mood for negotiations, and Chauri Chaura presented an opportunity to retreat with honour, before the internal weaknesses of the movement became apparent enough to force a surrender or make the retreat look like a rout.

மேற்கூறிய ஆக்கத்தில் குறிப்பாக இடதுசாரிகள் கொண்டிருந்த விமர்சனங்களும், காந்தி சரியான நிலைப்பாட்டை எடுப்பதற்கு அவரை உந்தி தள்ளிய காரணங்களும் விரிவாக பதிவாகியிருப்பது அதன் சிறப்பு எனலாம்.

வின்செண்ட் ஸ்மித் எழுதிய ஆக்ஸ்போர்டின் இந்திய வரலாறு (தமிழ் பாகம் 4ல்) மாண்ட்போர்ட் காலம் என்ற அத்தியாயத்தில் ஒத்துழையாமை தோற்றது என்ற பதிவுடன் ஏதும் பேசாமல் போய்விடுகிறது. இந்திய மாணவர்களுக்கு அதிகம் பரிந்துரைக்கப்படும் புத்தகங்களில் ஒன்று ஸ்மித்தின் வால்யூம்கள் என்பதை அறிந்தவர்களுக்கு இப்படி அவர் கடந்து போயிருப்பது ஏமாற்றத்தை நல்கும்.

Historical Dictionary of Pakistan என்பதை Shahid Javed Burki என்பார் காலவாரியாக தொகுத்துள்ளார். அந்த வரலாற்று 'டைம்லைன்களில்' சிப்பாய் கலகம் குறிப்பிடப்பட்டுள்ளது. ஜாலியன்வாலாபாக் என்ற பெயரில் இல்லாமல் அமிர்தசரஸ் பொதுக்கூட்டத்தில் துப்பாக்கி சூடு பலர் சுட்டுக்கொலை என்று சொல்லப்பட்டுள்ளது. பின்னர் நடந்த ஒத்துழையாமை- கிலாபத் குறித்தோ, உப்பு சத்தியாகிரகம், பிரிட்டிஷாரே வெளியேறுக குறித்தோ ஏதும் சொல்லப்படவில்லை. இப்படி பாகிஸ்தானில் வரலாறு மூடப்பட்டு போதிக்கப்படுவதையும் நாம் ஊகிக்கமுடிகிறது.

வி பி மேனன் தனது Transfer of Power In India வில் 1919 சட்டம் அதன் தொடர்பில் வந்த தேர்தல்கள்- காங்கிரஸ்/ கிலாபத் கமிட்டியார் பகிஷ்கரிப்பு, வேல்ஸ் இளவரசர் பகிஷ்கரிப்பு ஆகியவற்றை பேசுகிறார். காந்தியின் ஒத்துழையாமை தீவிரம் அரசாங்கத்தால் உணரப்படாமல் இல்லை. 1922 சௌரி சௌராவிற்கு பின்னர் அவர் போராட்டத்தை விலக்கிக்கொண்டார். கும்பலால் இன்ஸ்பெக்டர் உட்பட 21 போலீஸ்காரர்கள் தீக்கிரையாக்கப்பட்டு கொல்லப்பட்டனர். அந்த மாதத்தில் இங்கிலாந்து அமைச்சரவையில் கருத்து வேறுபாடுகள் முற்றி பிப்ரவரி 1922ல் மாண்டேகு பதவி விலகினார். மார்ச்சில் காந்தி கைது செய்யப்பட்டு தேசத்துரோக வழக்கில் நீண்ட கால தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டார்" என்று மேனன் பதிவு இந்நிகழ்வை கடந்து போய்விடுகிறது. அரசாங்க வட்டாரத்தில் உயர்தட்டு தொடர்புகொண்ட மேனன், அங்கு எப்படிப்பட்ட மனநிலை இருந்தது என்பதை பதிவு செய்யும் வாய்ப்புகள் நிறைந்தவர் என்று பார்க்கும்போது நமக்கு ஏமாற்றம்தான் மிஞ்சுகிறது.

Britain In India என்ற வரலாற்று நூலை ஆர்.பி மசானி எழுதியுள்ளார். அதில் வைஸ்ராய்க்கு ஆகஸ்ட் 1, 1920ல் காந்தியடிகள் எழுதிய கடிதத்தை குறிப்பிடுகிறார். வைஸ்ராயின் பதில் எந்த நிர்வாக நாகரீகமும் இல்லாமல் வந்தது என மசானி எழுதுகிறார். காங்கிரஸ் அமர்வுகளில் சிவில் ஒத்துழையாமை தலைவர்கள் சிலரால் எதிர்க்கப்பட்டதையும் பதிவிடுகிறார். 1922ல் உத்தரபிரதேசத்தில் போலீஸ் நிலையத்தில்

20 காவலர்கள் உயிருடன் எரிக்கப்பட்டனர். காந்தி போராட்டத்தை நிறுத்திக்கொண்டார். காந்தியின் மீது வழக்கு விசாரணை நடந்து சி என் புரூம்பீல்ட் நீதிபதி 6 ஆண்டு எளிய சிறைத்தண்டனை விதிக்கிறார். நீதிபதி பேசியதை மசானி சுட்டிக்காட்டுகிறார். அந்த வரிகள்..

It would be impossible to ignore the fact that in the eyes of millions of your countrymen, you are a great patriot and a great leader. Even those who differ from you in politics look upon you as a man of high ideals and of noble and of even saintly life. It is my duty to judge as a man subject to the law who has by his own admission broken the law and committed what to an ordinary man must appear to be grave offences against state. I do not forget that you have constantly preached against violence and that you have on many occassions, as I am willing to believe, done much to prevent violence..

An Advanced History of India என்பதை ஆர்.சி மஜூம்தார் எழுதியிருக்கிறார். இதை இந்தியாவின் சிறப்பு வரலாறு என கொணர்ந்துள்ளனர். அதன் பாகம் 3ல் சௌரி சௌரா பற்றி மஜூம்தார் உள்ளிட்ட ஆசிரியர்கள் கீழ்கண்டவாறு குறித்து செல்கின்றனர்.

1921 ஆம் ஆண்டு, சுதந்திரத்திற்கான இந்தியப் போராட்ட வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கிய நிகழ்ச்சியாய் விளங்கியது. சாத்வீக ஒத்துழையாமைத் திட்டத்தைத் தொடர்ந்து தீவிரமாக நடத்தவும், சட்ட மறுப்பு இயக்கத்திற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவும் தனக்குள்ள உறுதியை அகமதாபாத்தில் 1921 டிசம்பரில் காங்கிரஸ் வெளியிட்டது.

தேசிய இயக்கத்தைத் தலைமைதாங்கி நடத்துவதற்கு வேண்டிய முழு அதிகாரத்தையும் காங்கிரஸ், மகாத்மா காந்திக்குக் கொடுத்தது. மக்களிடத்தில் பேரார்வம் ஏற்பட்டதால், மிகப்பெரிய அளவில் மக்கள் இயக்கம் நடைபெறும் என ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், 87000 மக்களைக் கொண்ட ஒரு சிறிய மாவட்டமான பர்தோலியில் மட்டும் அவ்வியக்கத்தை நடத்துவதற்குக் காந்திஜி முடிவு செய்தார். உ பி யில் கோரக்பூருக்கு அருகில் உள்ள ஒரு சிறிய கிராமமாகிய சௌரி சௌரா என்னுமிடத்தில் மக்கள் கூட்டம், மூர்க்கத்தனமான தாக்குதலில் இறங்கியதால், இவ்விடத்திலும் அவ்வியக்கம் நிறுத்தப்பட்டது. அத்தாக்குதலில் விளைவாக, ஒரு காவல் நிலையம் கொளுத்தப்பட்டு, 22 போலீஸ்காரர்கள் கொல்லப்பட்டனர். காந்திஜியின் முடிவைக் கண்டு நாடு முழுவதும் திடுக்கிட்டது. ஆனால் அம்முடிவை, 1922 பிப்ரவரி 12ல் கூடிய காங்கிரஸ் செயற்குழு ஆதரித்தது..”

மஜூம்தார் சௌரி சௌரா நடந்த தேதியைக்கூட குறிப்பிடாமல், அது விலக்கப்பட்ட தேதியை மட்டும் சொல்லி செல்வதைக் காண்கிறோம்.

இ எம் எஸ் நம்பூதிரிபாட் எழுதிய A History of Indian Freedom Struggle மிக முக்கியமான புத்தகங்களில் ஒன்றாக பார்க்கப்படுகிறது.. இதில் ஜாலியன்வாலாபாக், கிலாபத் இயக்கம் சிவில் ஒத்துழையாமை பின்னணி குறித்து இ எம் எஸ் அவர்கள் விரிவாக பேசுகிறார். காந்தி தனது திட்டத்தை இரு அம்சங்களில் திட்டமிட்டார். ஒன்று constructive Programme அதில் எவை கொண்டுவரப்பட்டன என்பது குறித்து இ எம் எஸ் எழுதுகிறார். மற்றது போராட்டமுறையான பகிஷ்கரிப்பு. இந்த இரண்டின் இணைப்பு மூலம் மக்களின் நேரடி பங்கேற்பை சிறப்பாக பெறமுடிந்தது. வேல்ஸ் இளவரசர் பகிஷ்கரிப்பு

பெரும் ஆதரவைப் பெற்றது. இதையொட்டி பம்பாயில் கதர் உடுத்திய அனைவரும் தாக்கப்பட்டனர். கொல்லப்பட்ட 53ல் 45பேர் ஒத்துழையாமை இயக்கம் சார்ந்தவர்கள். ஆனால் காந்தியோ ஆட்சியாளர்களை குறை சொல்லாமல் வன்முறை நிகழ்வுகளை கண்டித்து பேசினார்.

சௌரி சௌரா பற்றி எழுத வரும்போது இந்திய விவசாயிகள் காந்தியின் அகிம்சை என்ற எல்லைக்குள் நிற்க மறுத்துவிட்டனர் எனச் சொல்லி எழுதுகிறார் இ எம் எஸ். இனி இ எம் எஸ் தரும் வரிகளை அப்படியே பார்க்கலாம்

" They had their own aims and forms of struggle which did not always go hand in hand with those set by Gandhi.

The most conspicuous demonstration of this was the incident that took place in Chauri chaura in the Gorakpur District. Following a picketing of shops conducted as part of the non coopeartion programme, there was none there to buy foreign cloth or liquor. Some of the volunteers who had created an atmosphere of national fervour were beaten up by a police officer.

Hearing the news, volunteers from the adjoining villages rushed to the spot and a strong 500 crowd marched towards the police station. Some mediators pacified them and they returned. Some of the volunteers who were thus returning were aganin attacked by the police, resulting in a fight between volunteers and police who opened fie killing a number of volunteers. But the clash still continued. Soon the police ran out of ammunition and ceased firing. The volunteers realising this, rushed towards the police station. The policemen took refuge in the station bolting doors. The people set fire to the station burning the policement to death.

இதன் பின்னர் இதெல்லாம் புரட்சிகர இயக்கங்களில் 'சகஜமப்பா' என்ற பாணியில் இ எம் எஸ் கருத்துக்களை தருகிறார். காந்தி ஒன்றும் புரட்சியை நடத்தவில்லையே.. அவரும் ஆட்சியாளர்களைப் போலவே மக்களிடமிருந்து எழும் வன்முறையைக் கண்டு அஞ்சுபவராக இருந்தார் என்ற பதிவைத்தருகிறார்.

..But Gandhi was not leading a revolution. Gandhi was a leader who, like the rulers was afraid of violence on the part of the people என அவர் மதிப்பிடுதலைக் காண்கிறோம். இது நியாயமற்ற மதிப்பீடாக எனக்குப் படுகிறது. காந்தியின் militant Non Violence என்பதை குறைத்து மதிப்பிடுவதாகவே தோன்றுகிறது.

மகாத்மா காந்தி நூல்வரிசை 2 அகிம்சா தருமம் பற்றிய தொகுப்பாகும். அதை ரா. வேங்கடராஜூலு தமிழாக்கம் செய்துள்ளார். சௌரி சௌரா குறித்த செய்தி அதில் foot note பகுதியாக தரப்பட்டுள்ளது. காந்தியின் யங் இந்தியா பிப்ரவரி 16, 1922 செய்தியும் இதில் விரிவாக சொல்லப்பட்டுள்ளதைக் காணலாம். அதிலிருந்து..

1922 ஜனவரி 31ல் சூரத்தில் கூடிய காங்கிரஸ் கமிட்டி சட்டமறுப்பு போராட்டத்தை ஆரம்பிக்க பர்தோலி மக்களுக்கு அனுமதியளித்தது. பர்தோலி 87 ஆயிரம் பேர்களை கொண்ட தாலூகா. மற்ற பகுதிகள் பர்தோலிக்கு உதவி செய்யவேண்டும் என்பதே தீர்மானம். கோரிக்கைப் பற்றி வைஸ்ராய்க்கு காந்தி கடிதம் அனுப்பினார். ஏற்கப்படவில்லை. காந்தி பர்தோலி சென்றார். இந்நிலையில் பிப்ரவரி 5ஆம் தேதி

சௌரி சௌராவில் நடந்த கலவரம் பற்றிய செய்தி 8 ஆம் தேதிப் பத்திரிகைகளில் வெளியாயிற்று. அங்கு ஒரு தேசிய ஊர்வலம் நடந்தது. ஊர்வலம் சென்றுவிட்டபிறகு அதில் சென்றவர்களில் பின் தங்கிவிட்ட சிலரைப் போலீஸ் சேவகர்கள் திட்டினார்கள். கலவரம் மூண்டது. போலீஸ்காரரர்கள் சுட்டனர்; தங்களிடம் இருந்த தோட்டாக்கள் தீர்ந்ததும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விட்டனர். பொதுக்கூட்டம் போலீஸ் ஸ்டேஷனுக்கு தீயிட்டது. 22 போலீஸ் சேவகர்களைப் பொதுக்கூட்டத்தினர் உயிருடன் கொளுத்திவிட்டனர்,.

இச்செய்தி கேட்டு காந்திஜி திடுக்கிட்டார். தன்னைத் தண்டித்துக்கொள்ள 12 ஆம் தேதி 5 நாட்கள் உண்ணாநோன்பு ஆரம்பித்தார். சட்டமறுப்பு போராட்டத்தையும் நிறுத்தினார். இச்சம்பவத்தைக் குறித்து 16-2-1922 யங் இந்தியாவில் பின்வருமாறு குறிப்பிட்டார்.

“ இச்சம்பவம் எனக்குத்தான் மிகவும் மானக்கேடாகிறது. சென்னை எச்சரிக்கை செய்தது. கவனிக்கத் தவறிவிட்டேன். ஆனால், சௌரி சௌரா மூலம் கடவுள் எனக்குத் தெளிவாகச் சொல்லிவிட்டார். மிருகத்தனமாக கொல்லப்பட்ட போலீஸ் சேவகர்கள் ஆத்திரமூட்டும் காரியங்களைச் செய்திருக்கிறார்கள் என்று அறிகிறேன். ஊர்வலத்தினரை ஒன்றும் செய்யமாட்டார்கள் என்று இன்ஸ்பெக்டர் கூறிய வாக்குறுதியையும் அவர்கள் மீறியிருக்கிறார்கள். ஊர்வலம் சென்ற பின்னர், பின்னால் மெதுவாகச் சென்றவர்களிடையே போலீஸ் சேவகர்கள் குறுக்கிட்டுத் திட்டியிருக்கிறார்கள். அவர்கள் உதவிக்கு கூச்சல் போட்டனர். கூட்டம் திரும்பிவந்துவிட்டது. போலீஸ் சேவகர்கள் சுட்டார்கள். அவர்களிடமிருந்த கொஞ்சம் தோட்டாவும் தீர்ந்துவிடவே பத்திரமாகப் போலீஸ் தாணாவுக்குத் திரும்பிவிட்டனர். ஆகவே பொதுக்கூட்டம் தாணாவிற்கு தீயிட்டது என்று நான் அறிகிறேன். தாணாவுக்குள் இருந்த போலிஸ் சேவகர்கள் உயிருக்கு அஞ்சி வெளியே வந்திருக்கிறார்கள். பொதுக்கூட்டத்தினர் அவர்களைத் துண்டு துண்டாக வெட்டித் தீயில் போட்டுவிட்டார்கள்.

இக்கொடுமையில் ஒத்துழையாமைத் தொண்டர்களுக்கு எந்தச் சம்பந்தமும் இல்லை என்று சொல்லப்படுகிறது. பொதுஜனக்கூட்டம் ஆத்திரம் மூட்டப்பட்டிருந்தது என்றும், அந்த ஜில்லாவின் போலீசார் செய்து வந்த அட்டூழியங்களையும் பொதுமக்கள் அறிந்திருந்ததால் ஆத்திரங்கொண்டுவிட்டனர் என்றும் சொல்லப்படுகிறது. போலீசார் அங்கே பாதுகாப்பற்று இருந்திருக்கின்றனர்; இரக்கம் காட்டுமாறு பொதுக்கூட்டத்தினிடம் மன்றாடும் நிலையிலும் அவர்கள் இருந்திருக்கிறார்கள். அப்படியிருக்க அவர்களை மிருகத்தனமாகக் கொன்றுவிட்டதற்கு ஆத்திரமூட்டப்பட்டுவிட்டனர் என்பது நியாயமாகாது. ...பொதுஜன பலாத்காரம் நடப்பது கெட்ட சகுனமேயாகும்..

.பர்தோலியில் வெற்றிபெற்றவர்களுக்கு விட்டுக் கொடுத்துவிட்டு இந்திய அரசாங்கம் போய்விடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். ஆத்திரம் மூட்டும் செய்கை நடந்தால் மிருகத்தனமான காரியங்களை செய்ய முற்பட்டுவிடும் கட்டுங்கடங்காதவர்களை அப்போழுது கட்டுப்படுத்துவது யார்? அகிம்சை முறையில் சுயராஜ்யம் என்றால் நாட்டிலுள்ள பலாத்காரப் போக்கினரை அகிம்சையால் அடக்குவது என்றும் ஆகிறது. இந்தியாவில் கலவரக்காரர்களை கட்டுப்படுத்துவதில் வெற்றிபெற்றால்தான்....

அகிம்சையோடு கூடிய ஒத்துழையாதார் வெற்றி பெறமுடியும். ஆகையால், சௌரி சௌராவில் நடந்த துக்ககரமான சம்பவம் என்னை முழுதும் துயரத்தில் ஆழ்த்திவிட்டது..”

மேற்கூறிய வரிகள் அடிக்குறிப்பு வரிகளாக அப்புத்தகத்தில் இடம்பெற்றுள்ளன.

சோவியத்தின் வரலாற்றறிஞர்கள் எழுதிய இந்திய வரலாறு சௌரி சௌராவை சொல்லி செல்கிறது. அந்தப்பகுதியை எழுதிய ஆசிரியர் கத்தோவஸ்கி. புத்தகத்தை பூ.சோமசுந்தரம் மொழிபெயர்த்துள்ளார். இயக்கம் பின்வாங்குகிறது என்கிற துணைத்தலைப்பில் காணப்படும் வரிகள்..

”..பிரிட்டனின் பட்டத்துக்கு உரிய வேல்ஸ் இளவரசர் 1921 நவம்பர் 17 இந்தியா வந்தபோது பம்பாய் தொழிலாளர்கள் 4 நாட்கள் அரசியல் வேலைநிறுத்தம் நிகழ்ச்சிகளின் போக்கில் உச்ச கட்டமாக விளங்கியது. சென்னையிலும் நாட்டின் மற்ற நகரங்களிலும் வேலைநிறுத்தங்களும் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களும் நடந்தன.

காந்தி பம்பாய் நிகழ்ச்சிகளைக் கண்டனம் செய்தார், ஆயினும் பின்வாங்க இன்னும் சைகை செய்யவில்லை. சுயராஜ்யம் பெறும்வரையிலும் கலீபாவின் தனியுரிமை மீட்டளிக்கப்படும் வரையிலும் ஒத்துழையாமை இயக்கத்தை தொடர்ந்து நடத்துவது என்று அகமதாபாத் காங்கிரஸ் மாநாடு டிசம்பர் 1921ல் முடிவு செய்யப்பட்டது. காந்தி இயக்கம் நடத்தும் விஷயத்தில் முழு அதிகாரம் பெற்ற தலைவராக- சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டார்.

அதே சமயம் காலனியாட்சி இயக்கத்தினருக்கு எதிராக அடக்குமுறை நடவடிக்கைகளை தொடங்கியது…1922ன் துவக்கத்திற்குள் 16000பேர்கள் கைது செய்யப்பட்டார்கள். மோதிலால், ஜவஹர், அலி சகோதரர்கள், தாஸ், லாலாஜி போன்ற பிரபல தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்.

அடக்குமுறை நடவடிக்கைகளை உடனே நிறுத்துமாறு வைஸ்ராய் ரீடிங்கிற்கு காந்தி பிப்ரவரி 1 அன்று இறுதி கோரிக்கை விடுத்தார். இல்லாவிடில் வரிகொடா இயக்கம் தொடங்கிவிடுவதாக எச்சரித்தார்.

ஆனால், சில நாட்கள் கழியுமுன்னரே காந்தி போர்த்தந்திரத்தை ஒரேயடியாக மாற்றிவிட்டார்…திடீர் திருப்பத்துக்குக் காரணமாகப் பயன்பட்டவை சௌரி சௌராவில் பிப்ரவரி 4ல் நடந்த நிகச்சிகள். அங்கே திரளான விவசாயிகள் தங்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்திய போலீஸ்காரர்களை நிலையக் கட்டிடத்துக்குள் விரட்டி நெருப்பிட்டு பொசுக்கிவிட்டார்கள்.

தீக்கிரையான போலீஸ்காரர்களின் குடும்பங்களுக்கு காந்தி வெளிப்படையாக அனுதாபம் தெரிவித்தார். விவசாயிகள் போரட்ட நடவடிக்கைகளில் பங்குகொண்டவர்களை அதே சமயம் அவர் கடுமையாக கண்டனம் செய்தார். தம் கருத்துப்படி நாடு அகிம்சைக்கு இன்னும் ஆயத்தம் ஆகவில்லை என்று கூறி, சாத்துவீக ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்திவிட்டதாக அறிவித்தார்.

காந்தியின் இந்த முடிவுக்குக் காரணங்கள் இரு வகையானவை: அவருடைய கணிப்பில் ஒருபுறம், தேசிய எதிர்ப்பு சக்திகள் ஏகாதிபத்தியத்தின் வலிமைக்கு எதிரராக நிற்க இன்னும் திறன் பெறவில்லை. மறுபுறம், வெகுஜன இயக்கம் காங்கிரஸ் தலைமைக்குழுவின் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேறிக்கொண்டிருந்தது.

பர்தோலியில் கூடிய காங்கிரஸ் செயற்குழுவின் அசாதரணக் கூட்டம் காந்தியின் நிலையை ஒரு தீர்மானத்தால் உறுதிபடுத்தியது.....விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்டிருந்த சாதாரணத் தொண்டர்களுக்கு காந்தியும் காங்கிரஸ் தலைமைக்குழுவும் செய்த முடிவு முற்றிலும் எதிர்பாராததாக இருந்தது. காங்கிரசின் தாழ்நிலை நிறுவனங்களில் பெருந்தொகையான எதிர்ப்புகள் கிளம்பின. தேசியவாதிகளின் இடதுசாரிக் குழுக்கள் தெளிவாக உருவாகவும் மறைமுகப் பயங்கரவாத நிறுவனங்களின் நடவடிக்கைகள் மீண்டும் உயிர்ப்படையவும் இந்த நிலைமை வாய்ப்பளித்தது"

சோவியத் ஆசிரியர் செளரி செளராவை முற்றிலும் விவசாய இயக்கம் ஒடுக்கப்பட்ட நிகழ்வாக சித்தரிப்பதை பார்க்கிறோம்.

சாவர்க்கர் வரலாற்றை எழுதிய இளம் வரலாற்றாசிரியர் விக்ரம் சம்பத் ஒத்துழையாமை செளரி செளரா குறித்து இவ்வாறு பதிவிட்டுள்ளார்

Gandhi embarked on a masss civil Disobedience from Bardoli, in the Surat district on Feb 1, 1922. Gandhi mentioned in his letter to the viceroy that this was to carry on till all prisioners convicted in the movement were released, the press freed from interference, and the redress of the Khilafat and Punjab wrongs were taken up.It was undoubtedly bold ulitimatum..

On its part, the government did not take the developments lightly. On feb 6, the viceroy declared war, bent upon crushing this upsurge. Just a day earlier, on Feb 5, an incident in a small village called Chauri Chaura near Gorakhpur in the UP inadvertently provided a way out of the deadlock. The police opened fire on demonstrators, before running out of ammunition and locking themselves up in their station. The excited mob set fire to the police station ans as harried officers came running out, some twenty two of them were hacked to death and their bodies thrown into flames.

After that events progressed quickly. Gandhi decided to use the Chauri Chaura incident as an excuse to call off his movement at a time when it had peaked and agree to a RTC instead.."

விக்ரம் சம்பத்திற்கு காந்தி மீதான பாரபட்சம் அவர் எழுதிய நூல் முழுதும் இருப்பதால் அவர் இங்கும் அப்படியே காட்டியுள்ளார். துணைக்கு சுபாஷை அழைத்துக்கொள்வதையும் அந்நூலில் காணலாம்.

Documents of the History Of Communist Party 1923-1925 என்பது பெரும் ஆவணம். கம்யூனிஸ்ட் கட்சி வரலாற்று ஆவண நூல் தொகை இரண்டு. அதில் செளரி செளரா பற்றி பேசப்பட்டுள்ளது. செளரி செளரா வழக்கு தண்டனைகள் எதிர்த்து என்ற தலைப்பில் அப்பதிவு செல்கிறது. அதை அறிமுகப்படுத்தக்கூடிய வகையில் கீழ்கண்ட வரிகள் சாராம்சமாக சொல்லப்பட்டுள்ளன.

1920-22 ஒத்துழையாமை காலத்தில் ஏராள உழவர் எழுச்சிகள் நடந்தன. பிப்ரவரி 4, 1922ல் சௌரி சௌராவில் நடந்த நிகழ்வு அதை வரலாற்றில் celebrity ஆக்கிவிட்டது. பம்பாய் கிரானிக்கில் வழியாக இரண்டு நாட்களுக்கு பின்னர் தெரிந்துகொண்ட காந்தி இயக்கத்தை நிறுத்த முடிவெடுத்தார். பர்தோலியில் காங்கிரஸ் செயற்குழு பிப்ரவரி 11, 12ல் நடந்தது. அதில் அவர் முடிவை ஏற்கவும் வைத்தார். காந்தி யங் இந்தியா பிப்ரவரி 15, 1922ல் The crime at Chauri Chaura எழுதி விவரித்திருந்தார். எம் என் ராய் Legal Murder In India என்கிற கட்டுரையை எழுதியிருந்தார். இரண்டுக்கும் வித்தியாசம் என்னவெனில் ராய் எழுதியதில் போலீசார் காங்கிரஸ் தொண்டர்கள் கணிசமானவர் தாக்கப்பட்டதை சுட்டிக்காட்டியது. ஆனால் காந்தி எழுதியதில் ஒத்துழையாமைவாதிகளுக்கு இந்த மிருகத்தனத்தில் தொடர்பில்லை என சொல்கிறார். ஆனால் கூட்டத்தினருக்கு போலீசின் அத்துமீறல்கள் நன்றாகவே தெரிந்திருந்தது என்று எழுதினார். பிப்ரவரி 19, 1922ல் நேருவிற்கு தந்த விளக்கத்தில் காந்தி அரசியல் எண்ணமுள்ள கூட்டம் என எழுதுகிறார் :

..but the brutal murder of the constables by an infuriated crowd which was in sympathy with non cooperation cannot be denied. Nor can it be denied that it was a politically minded crowd" போலீஸ்காரர்களின் கொடுமைகளே செய்திருந்தாலும் இப்படிப்பட்ட பழிவாங்கலை பொதுஜனம் செய்யக்கூடாது- அப்படி நடைபெறுவது மோசமான சகுனம் என்றார். அதை violent activities by hooligans என்று கூட பேசினார். ஆனால் உண்மையில் தேசபக்த சக்திகளின் பெரும் எதிர்ப்பு அவை. பர்தோலியில் போராட்டத்தை நிறுத்தாவிட்டால் நாம் வன்முறை போராட்டத்தை தொடர்ந்திருப்போம் என நேருவை சமாதனப்படுத்த முயன்றார். காந்தியின் 10 மார்ச், 1922 கைதிற்கு பின்னால் போராட்டம் அடங்கிப்போனது.

டாங்கே மீண்டும் போராட்டம் என எழும்போது சௌரி சௌரா போல் நிறுத்திவிடுவீர்களா எனக் கேட்டதாகவும் காந்தி எதிர்மறையாக பதில் அளித்ததாகவும் இந்த ஆவணத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஆனால் இதற்கு எந்த சாட்சியமும் இல்லை என்பதையும் நேர்மையாக தெளிவாக்கிவிடுகிறது ஆவணம். இந்த ஆவணத்தில் இப்படியான மதிப்பீட்டிற்கு வருகிறார்கள் அன்று இருந்த இளம் கம்யூனிஸ்ட்கள். சௌரி சௌராவை உழவர்களின் பெரும் எழுச்சியாக சொல்கிறார்கள்

" It is necessary to point out that the Chauri chaura incident was not just a crime perpetrated by a hooligan crowd. It was heroic episode in the first Non coopearation movement, the main feature of which was the spontaneous upsurge of the peasant masses who were roused to the spirit of national consciouness by gandhiji's militant slogans of non coopeartion with the satanic governement and Swaraj within a year.

நாங்கள் வந்த மதிப்பீட்டை உறுதி செய்யும் நிலையில்தான் ஏப்ரல் 1923ல் வந்த 100 பக்க அலகாபாத் தீர்ப்பு உறுதி செய்கிறது என்றும் ஆவணம் பேசுகிறது.

போலீஸ் 1000பேருக்கு மேல் வழக்கு தொடர்ந்தது. ஆனால் 225 பேர் மீது விசாரணை நடந்தது. ஜூன் 21, 1922ல் செஷன்ஸ் விசாரணை தொடங்கி நடைபெற்றது. சாட்சியப் பதிவுகள் அக்டோபர் 23ல் ஆரம்பமானது. தீர்ப்பு ஜூன் 9, 1923ல் வந்தது. 172 பேருக்கு மரணதண்டனை என வந்த தீர்ப்பால் மேல்முறையீடு அலகாபாத் உயர்நீதிமன்ற

தலைமை நீதிபதி டி.சி பிகாட் முன்னிலையில் வந்தது. அவர் விசாரித்து தீர்ப்பை ஏப்ரல் 1923ல் வழங்கினார்.

காந்தி வந்து சென்ற பின்னர் கோரக்பூர் பகுதியில் 600 கிராமங்களில் இயக்கம் தீவிரமானது. சௌரி சௌரா நிகழ்வில் சௌரா மற்றும் தும்ரிகெல் கிராமங்களைச் சார்ந்த 3-4 ஆயிரம் பங்கேற்றனர். ஒத்துழையாமை கமிட்டிகள் அமைத்து உறுதிமொழி கூட்டங்கள் முன்பாக 1921ல் நடக்கத்துவங்கின. பிரிட்டிஷ் அரசு இதை unlawful assembly என நவம்பர் 1921ல் தடைவிதித்தது. தடைகளைமீறித்தான் உழவர்கள் கூடினர். சௌரி பகுதியில் ஒத்துழையாமை கோரிக்கைகளுடன் அவர்கள் இறைச்சி மீன் கடைகள் மறியல் என்பதையும் செய்தனர். போலீஸ் நிலயத்திற்கு வடக்கில் முந்தேரா பஜார் பகுதியில் இந்த இயக்கம் நடந்தது. நீதிமன்றமே ஏற்ற விஷயம் அங்கு கடுமையான விலைவாசி என்பது. எனவே இறைச்சி, மீன் விலையை குறைக்கவேண்டும் என்கிற போராட்டமாகவும் அது இருந்தது.

பிப்ரவரி 1 அன்று 40 தன்னார்வலர்கள் மட்டுமே அந்த பஜாரில் கூடினர். வியாபாரிகள் போலீசாரை அழைத்தனர். போலீசார் கலைந்துபோக வைத்தனர். பிப்ரவரி 4 அன்று வருவோம் என போராட்டக்காரர்கள் திரும்பிச் சென்றனர். இதை தடுக்க துணை ஆய்வாளர் குப்தேஸ்வர் சிங் சிலரை தாக்கி எச்சரித்துள்ளார். பகவான் அகிர் என்பவர் இராணுவ ஓய்வூதியர்- முதல் உலகப்போரில் மெசபடோமியாவில் பயிற்சி கொடுத்தவர். அப்படிப்பட்டவரை குப்தேஸ்வர் தாக்கியுள்ளார். இந்தச் செயல் கடுமையான ஆத்திரமூட்டலாக அமைந்தது. லால் முகம்மது தலமட்ட கிலாபத் கமிட்டியிடம் இந்நிகழ்வை கொண்டுசென்றார். அந்த ஆய்வாளருக்கு சரியான பாடம் புகட்டவேண்டும் என்கிற உணர்வு பெருகியது. கிலாபத்தோ காங்கிரசோ இதற்கு உடனடியாக என்ன செய்தார்கள் என்ற விவரம் தீர்ப்பில் இல்லை.

தும்ரிகெல்லீல் 1500 பேர் கூடினர். கூட்டத்தில் பலர் உரை நிகழ்த்தினர். ஜகத் நாரயண் என்பார் மட்டும் அமைதியாக கலைந்து செல்லுங்கள் - ஆயுதம் ஏந்திய காவலர்கள் தாணாவில் போடப்பட்டுள்ளனர் என எச்சரித்தார். இரு முஸ்லீம்கள் பேசும்போது அலி சகோதரர்களை குறிப்பிட்டு உணர்ச்சிகரமாக பேசினர். நாசர் அலி, லால் முகம்மது, ஷியாம் சுந்தர் ஆகிய மூவரும் கலைந்து போகக்கூடாதென்றனர். நாசர் அலி போலீஸ் நிலையம் நோக்கி என்பதை ஏற்கச் செய்தார். குப்தேஸ்வரிடன் ஏன் அடித்தீர்கள் என நியாயம் கேட்போம்- பிறகு முந்தேரா பஜார் சென்று மது- இறைச்சி- மீன் கடைகளுக்கு சென்று விற்கக்கூடாது என வலியுறுத்துவோம் என்றார் நாசர்.

மூங்கில்குச்சியில் கொடியேந்தி 3000 பேர்கள் ஊர்வலமாக காவல் நிலையம் நோக்கி சென்றனர். நாசர் அலி, ஷ்யாம் சுந்தர், சிகாரி ( பின்னர் அப்ரூவரானார் தலைமை தாங்கி அழைத்து சென்றனர். ஊர்வல விவசாயிகளின் தீவிரத்தை நீதிபதிகள் புரிந்துகொண்டாலும் உளவியல் உணர்வாக அதை மூடிமறைக்க உளவியல் அம்சத்தை ஏற்றுகின்றனர். அக்கோபம் எழுச்சி தேசிய உணர்வின் வெளிப்பாடு- இந்து முஸ்லீம் ஒற்றுமையின் உணர்வது- அந்நிய ஆட்சியை எதிர்ப்பது என்ற உணர்வது- லோகல் போலீஸ் அவர்களின் கையாட்கள் என்ற உணர்வது. அதனால்தான் நீதிபதியாலும் 170 மரணதண்டனை என்பதை அப்படியே ஏற்கமுடியவில்லை. அதை அவர்களே 19 ஆக

குறைக்கவேண்டியிருந்தது. ஆனால் இப்படியெல்லாம் அந்நிய ஆட்சியின் சட்டங்களை காப்பதற்காக இருக்கும் நீதிபதிகளிடம் எதிர்பார்க்கமுடியாது.

We take account, nevertheless, of the fact that this crime grew out of a political agitation"

“the ignorant peasants were drawn into the business by misrepresentation of facts and preposterous promises concerning the millennium of swaraj in the fight for which they had muster courage and resoultion on theri part..some peasants were apparently influencedby blind faith in Gandhiji and by the belief that the Mahatma was a worker of miracles என்று தீர்ப்பு பேசியுள்ளது.

தீர்ப்பு தந்த கணக்கின்படி பார்த்தால் 38 பேருக்கு விடுதலை, 3 பேருக்கு 2 ஆண்டுகள் சிறை- 129 பேர்மீது கொலைக்குற்றம் இருந்தாலும் 19 பேருக்கு மரணதண்டனை ( as taken prominent part in the crime என்று) மற்ற 110 பேருக்கும் நாடுகடத்தி ஆயுட்சிறை. இந்த 110 பேரின் நாடுகடத்தலிலும் 14 பேர் லிஸ்ட் ஏ அவர்களுக்கு கருணை கிடையாது. லிஸ்ட் பி 19 பேர் 8 ஆண்டுகள் கடும் சிறை, லிஸ்ட் சி 57 பேருக்கு 5 ஆண்டுகள் கடும் சிறை, லிஸ்ட் டி 20 பேருக்கு மூன்றாண்டு சிறைக்குப்பின்னர் விடுதலை என்று தீர்ப்பு எழுதினர்.

காந்தியின் முடிவை அறிந்த காங்கிரசார் வழக்கில் உதவ ஏதும் செய்யவில்லை. காந்தி தேவதாஸ் அவர்களுக்கு பிப்ரவரி 12, 1922ல் எழுதிய கடிதத்தில்:

Am fasting till Friday evening by way of penance and warning people who with my name on lips, have brutally hacked constables to death. Strogly advise wrongdoers confess guilt and deliver themselves to authorities"

நிலைமைகள் கட்டுக்குள் வந்ததில் உற்சாகம் அடைந்த பிரிட்டிஷ் அப்போலீஸ்காரர்களுக்கு நினைவிடம் அமைத்தது To Guard my People என எழுதி வைத்தது. இது ஏழை போலீஸ்காரர்களுக்கான நினைவல்ல. போலீஸ் அரசிற்கான நினைவகமது. ஆனால் the martyrdom of the peasant fighters of Chauri chaura will remain enshrined in the grateful memory of our people for ever" என கம்யூனிஸ்ட் ஆவணம் பேசுவதைக் காண்கிறோம்.

வழக்கை முடிந்தவரை கவனித்து கட்சி ஆவணப்படுத்தியுள்ளது என பார்க்கும்போது அதன் பொறுப்பை நாம் பாராட்டவேண்டும். அதே நேரத்தில் ஏன் மக்கள் மனதில் காலகாலத்திற்கும் அந்த “martyrs" என பதிவானவர்களுக்கு சிம்மாசன ஏற்பாடு இல்லை என்பது பரீசீலீக்கப்படவேண்டிய கேள்வியாக இருக்கிறது. ஏன் புரட்சிகர இயக்கங்கள் உட்பட எவரும் அந்த 'தியாகிகளை' நினைவு கூறவேயில்லை என்பதும் வரலாற்றில் பரீசிலீக்கப்படவேண்டிய கேள்வியாக இருக்கிறது.

The documents produced here are mostly articles from the Indian communist press printed abroad என்ற பதிவையும் செய்துள்ளார்கள். விரிவாக இந்நிகழ்வை பதிவு செய்துள்ள இந்திய கம்யூனினிஸ்ட் கட்சி பாராட்டிற்குரிய ஒன்றாகும்.

எம் என் ராய் The Legal Murder In India என வெளிநாட்டிலிருந்துகொண்டு கட்டுரை ஒன்றை எழுதினார். அதில் சௌரி சௌரா வழக்கு பற்றியும், காந்தியின் போராட்ட அறைகூவல்- விவசாயிகளின் வர்க்க குணம் தெரியாதவர் காந்தி என்றும் அவர் எழுதி

செல்கிறார். காந்திதான் ஒத்துழையாமை என்கிற பெயரில் அவர்களை தட்டி எழுப்பினார் என்பதை ராய் ஏற்கிறார்.

ராய் அவர்களின் பதிவின்படி பிப்ரவரி 2, 1922ல் மார்க்கெட் மறியலில் துப்பாக்கி சூடு என்று சொல்லப்பட்டுள்ளது.. இரண்டு நாட்கள் கழித்து 3000 பேர் பங்கேற்ற அவ்வியக்கம் பற்றி ராய் பேசுகிறார். துப்பாக்கி சூடு, 21 போலீஸ்காரர்கள் எரிக்கப்படுதல் குறித்து அவர் விவரிக்கிறார். எம் என் ராய் தொண்டர்கள் பகுதியில் சாவு எண்ணிக்கையை அரசாங்கம் குறைவாக காட்ட கவனமாக இருக்கும் என்றார் ராய். எதற்காக கண்ணுக்கு கண் என்கிற சட்டம். 22 ( இங்கு 22 என எழுதுகிறார்) உயிருக்கு 172 பதில் என அவர்கள் தீர்ப்பு. எத்தனையோ ஏழை விவசாயிகள் போலீசாரின் குண்டுகளுக்கு இரையாகியுள்ளார்களே- அதற்கெல்லாம் எப்படி பழித்தீர்த்துக்கொள்வது? யார் செய்வது? இப்படித்தான் இம்ப்ரிகார் 24-1-1923 தேதியிட்ட ராயின் கட்டுரை முடிகிறது. 172 lives will be sacrificed on the altar of landlordism in league with imperialism. A lesson for the nationalists. தேசியவாதிகளுக்கு நல்ல பாடம் என்பது ராயின் மதிப்பீடு.

An appeal to the labour Unions of India என்ற கட்டுரையில் எம் என் ராய் 172 வீரர்கள் தூக்கு கயிற்றை எதிர்நோக்கி காத்து நிற்கின்றனர். chauri Chaura was the scene of the revolt not only against the government but also against the established order of society, against the sacred right of property- of landlordism. Hence the hand of repression has come down in its naked brutality, first as armed forces firing upon an unarmed mob, then wholsale arrest of all implicated and lastly as this leagal massacre."

அப்போராட்டத்தை அரசாங்க எதிர்ப்பாக மட்டுமின்றி சொத்திற்கு எதிரான- நிலபிரபுத்துவ எதிர்ப்பாக ராய் வர்ணிக்கிறார். அதனால்தான் ஒடுக்குமுறையை கொடுமையாக அரசாங்கம் செய்தது என அவர் புரிந்துகொள்கிறார்.

காங்கிரஸ் போராட அழைப்புவிட்டுவிட்டு மெளனம் காக்கிறது. கருணையற்ற எதிரியிடம் விடப்பட்டுள்ளனர். தொழிலாளர்களே நீங்கள்தான் இந்த போராளிகளை காக்கவேண்டும். ஏகாதிபத்தியவிமர்சனம், கண்டனதீர்மானங்கள் போதா. பொதுவேலைநிறுத்தம் மூலம் அவர்கள் விடுதலையைக் கோருங்கள்- உங்கள் வர்க்கப்போரை உயர் தட்டு நுழைந்து கெடுக்காமல் பாதுகாப்பீர். இந்த வேண்டுகோளை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் விடுவதாக எம் என் ராய் எழுதியுள்ளார். பிப்ரவரி 12, 1923ல் எழுதியதைப் பார்க்கிறோம்.

அப்போது இந்தியாவில் நாடு முழுமைக்குமான கம்யூனிஸ்ட் கட்சி என ஏதும் பிறக்கவில்லை. ஆங்காங்கே குழுக்கள் இருந்தன. வெளிநாட்டில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி என்ற பெயரில் ராய் செயல்பட்டுக்கொண்டிருந்தார். தனது எழுத்தின் மூலம் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு இந்திய நிலைமைகளை சொல்பவராக ராய் அப்போது கருதப்பட்டு வந்தார். அந்த அளவில் அன்று ராயின் எழுத்துக்கள் இந்திய இளம் கம்யூனிஸ்ட்களிடம் செல்வாக்கை செலுத்தின.

# V

இதைத்தொடர்ந்து காந்தியின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த வழக்கு குறித்து முல்க்ராஜ் ஆனந்த் தனது முன்னுரையுடன் எழுதியுள்ளார். சரோஜினி என்ன எழுதினார் என்பதைக் குறிப்பிட்ட ஆனந்த் அமைதி தவழ்ந்த முகத்துடன் காந்தி நீதிமன்றம் வரும்போது அனைவரும் எழுந்து நின்று அந்த குற்றவாளிக்கு மரியாதை செலுத்தினர். தனது அறிக்கையை படிக்க 15 நிமிடம் காந்தி எடுத்துக்கொண்டார். ஆனந்த் மொழியில் சொல்வதானால்

One could perceive the atmosphere of the hall changing every minute. The historic production was the masters'own. The ennobling confessions, the convincing logic, masterly diction, the elevated thoughts and inspiring tone, all produced instantaneous effect on the audience, including the Judge and the Prosecutor. For minute, everyone wondered who was on trail- whether Gandhi before a British judge or whether it was the British Governement before God and Humanity.

செளரி செளராவிற்கு பின்னர் பம்பாய், சென்னை, வங்க கவர்னர்கள் வைஸ்ராயால் அழைக்கப்பட்டனர். காந்தியை என்ன செய்யலாம் என்பது விவாதமானது. இறுதியில் மார்ச் 1, 1922 லார்ட் ரீடிங் கைது செய்ய உத்தரவு தருகிறார். காந்தியும் மார்ச் 10, 1922 இரவு 10.30க்கு கைது செய்யப்படுகிறார். சபர்மதி ஆசிரமத்திற்கு வெளியே எஸ் பி ஹீலே நிற்கிறார். சங்கர்லால் பாங்கரும் உடன் கைது செய்யப்படுகிறார்.

. காந்தி ஜூன் 15, 1921ல் எழுதிய Disaffection as a Virtue , 29,செப்டம்பரில் எழுதிய Tampering with loyalty,, டெசம்பர் 15, 1921ல் எழுதிய The Puzzle and its solution ஆகியவை தேசத்துரோக குற்றச்சாட்டிற்கு உள்ளாயின. Shaking the Manes பிப்ரவரி 23, 1922ல் எழுதப்பட்டது. ஆகவே 4 கட்டுரைகள் தொடர்பான வழக்கது. டி எஸ் பி தேவையான நேரம் காந்தி எடுத்துக்கொள்ளட்டும் என்றார். ஆசிரமவாதிகள் கூடவே குஜராத்தி பாடலொன்றை இசைக்கிறார்கள். காந்தி கடுமையாக வேலை செய்வீர் என்கிறார். சபர்மதி சிறைக்கு அழைத்துச் செல்லப்படுகிறார். படுக்கைவசதியுடன் கூடிய இரு அறைகள் தனித்தனியே கொடுக்கின்றனர். மறுநாள் வழக்கு நடைபெறுகிறது. பப்ளிக் பிராசிக்யூட்டர் ராய் பகதூர் கிர்தாரிலால். பார்வையாளர்களாக வல்லபாய், கஸ்தூர்பா, அம்பாலால், திருமதி சாராபாய், டாக்டர் கங்கா, சரோஜினி நாயுடு போன்றவர்கள் இருந்தனர்.

காந்தியிடம் மாஜிஸ்ட்ரேட் வயது, சாதி, தொழில் கேட்கிறார். காந்தி 53, பனியா இந்து, விவசாயி- நெசவாளி என்கிறார். வழக்கை செஷன்ஸ் கோர்ட் விசாரிக்க அனுப்புகின்றனர். அங்கு வழக்கு 18 மார்ச் 1922ல் துவங்குகிறது. நீதிபதி சி என் புரூம்பீல்ட். பார்வையாளர் வரிசையில் கஸ்தூர்பா, சரோஜினி, மதன் மோகன் மாளவியா, அம்பாலால் சாரபாய், டி பிரகாசம், நேரு, என் சி கேல்கர், அனுசுயாபென், அப்பாய் தியாப்ஜி கேசவ மேனன் போன்றவர்கள் இருந்தனர். அட்வகேட் ஜெனரல் சர் ஜேடி ஸ்ட்ராங்மேன் தனது வாதத்தில் பம்பாய், செளரி செளரா கலவரங்களை கொலைகளை சுட்டிக்காட்டினார். குற்றத்திற்கான கட்டுரைகளில் அகிம்சை வற்புறுத்தப்பட்டிருந்தாலும் அரசின் மீது disaffection என்று எழுதி பகிரங்கமாக காந்தி

தூண்டிவிட்டுள்ளார்.  The answer to that question seemed to him to come from Chauri Chaura, Madras, Bombay.

காந்தி தனது பதிலில் குற்றத்தை முழுமையாக ஏற்றுக்கொண்டார். I wish to endorse all the blame that the learned Advocate General has thrown on my shoulders in connection with the Bombay , Madras and the Chauri Chaura occurrences. Thinking over these deeply, and sleeping over them, night after night, it is impossiblefor me to disassociate myself from the diabolical crimes of Chauri chaura, or the mad outrages of Bombay. He is quite right when he says, that as a man of responsibility, a man having received a fair share of education, having had a fair share of experience of this world, should have known consequences of eveyone of my acts. I know them. I know that I am playing with fire. I ran the risk and if I was set free I would still do the same...

I know that my people have sometimes gone mad. I am deeply sorry for it.And I am therefore here to submit not to a light penalty but to the highest penalty. I do not ask for mercy..

நீதிபதி தனது தீர்ப்பில் நீங்கள் குற்றத்தை ஏற்றுக்கொண்டு எனது வேலையை எளிதாக்கியுள்ளீர்கள்.  The law is no respector of persons.. you are in a different category from any person I have tried or am likely to have try..It is my duty to judge you  as a man subject to the law..I do not forget that you have consistently preached against violence.. as I ma willing to believe done much to prevent violence. But having regard to the nature of your political teaching and the nature of many of those to whom it was addressed, how you could have continued to believe that violence would not be the ineveitable consequence, it passes my capacity to understand.

பின்னர் நீதிபதி திலகர் வழக்கு போலவே உங்களுக்கும் 6 ஆண்டுகள் சிறை என்றார். காந்திக்கான தண்டனையை அவர் பெருமிதத்துடன் ஏற்றார். பலரும் கண்ணீர் வடித்தனர். அவர் மீண்டும் சிறைக்கு அழைத்து செல்லப்பட்டார்.

சௌரி சௌரா காலம் குறித்து ஏராள செய்திகள் ஆங்காங்கே இருக்கலாம். தூக்கில் தொங்கவிடப்பட்ட அந்த குடும்பங்கள் என்னவாயின- கிராமத்தில் அக்குடும்பங்கள் எப்படிப்பட்ட உளவியல் ஆதரவை- அல்லது தாக்குதலை எதிர்கொண்டன. அந்தக் குடும்பத்தின் வாரிசுகள் எவருக்காவது ஏதாவது பெருமித உணர்விருக்கிறதா- அல்லது குற்றவுணர்விருக்கிறதா  என்று எதுவும் எனக்கு தெரியவில்லை. எரிந்து போன  காவலர் குடும்பங்கள்  என்னவாயின- விடுதலை இந்தியா அவர்களை எப்படி பார்த்தது- அந்தக் குடும்ப வாரிசுகளுக்கு இன்னும்  இந்நிகழ்வை நினைத்தால் துயரம் இருக்கிறதா- குற்றவுணர்வு இருக்கிறதா எதுவும் தெரியவில்லை. இப்படி மிக முக்கியமான சம்பவம் வரலாற்றின் நினைவுகளில் ஓர் ஓரம் கூட கிடைக்கப்பெறாமல் மௌனமாக விடுதலை இந்திய என் போன்ற தலைமுறைகளால் கடந்து  செல்லப்பட்டுள்ளது. இப்படி இன்னும் எத்தனையோ மனிதர்கள் நம் நினைவு குகைக்கு அப்பால்... புதையுண்டவர்களாக...

டிசம்பர் 26, 2021

சௌரி சௌரா சில நிழற்படங்கள்



Chauri Chaura Incident

ஆசிரியரின் பிற நூல்கள்



1. மார்க்சியத் தடங்கள்

2. ரோசாலக்ஸம்பர்க்

3. போராளிகளின் குரல்

4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்

5. Trade Justice in Telecom

6. Selected Ideas of O.P Gupta

7. ஹெகல் துவங்கி..

8. கார்க்கியின் அரசியல்வெளி

9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்

10. காந்தியைக் கண்டுணர்தல்

11. நேருவின் மரபு

12. பெரியாரின் பொதுவுடைமை புரிதல்

13. அம்பேத்கரும் கம்யூனிசமும்

14. தோழர் காந்தி மகாத்மாவின் சோசலிச உரையாடல்

சிறு வெளியீடுகள்

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா

2. சிகாகோ மேதின தியாகிகள்

3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்

4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்

5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்

6. நேதாஜி சுபாஷ் – கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்

7. காந்தியும் கம்யூனிசமும்

8.வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கர்

9. பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் (என் எளிய வாசிப்பில்)

10. லெனின் நான்கு கட்டுரைகள்

www.pattabiwrites.in